# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை




சிலம்பு-௪௯] வள்ளுவர் ஆண்டு உ00௬, தை. (Feb. '75) [பரல்-௬

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---



27-1-1975இல் குணசீலத்தில் நடைபெற்ற
செல்வன் இரகுபதி - செல்வி சுகுண திருமணத்தின்போது
செட்டிநாட்டரசர் டாக்டர் இராசா சர் முத்தையா செட்டியாரவர்களும்,
திவான்பகதூர் தி. மு. நாராயணசாமி பிள்ளை அவர்களும்
வந்திருந்து மணமக்களை வாழ்த்தியருளினர்.

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௬, தை | பரல் |
|---|---|---|
| ௪௯ | பிப்ரவரி 1975 | ௬ |


ஆவியுலகத் தொடர்பாளர் (மீடியம்)
*திரு இரா. ந. குற்ருலலிங்கம் பிள்ளை அவர்கள் வழிக்
காணுவுலகு வாழ்நர் மறைத்திரு மறைமலையடிகளாரிடங்

## கழகம் பெற்ற நன்மைகள்

காணுவுலகுவாழ் பெருமக்களிற் சிலர் ஆவியுலகத் தொடர்பாளர்வழி வழங்கிய வாழ்த்துரைகள், கட்டுரைகள் முதலியன செந்தமிழ்ச்செல்வி 34, 35, 36 ஆம் சிலம்புகளில் வெளியிடப் பெற்றபோதும், மறைமலையடிகள் நூல்நிலையத்தின் முதலாண்டு நிறைவு விழாவின்போதும் வரப்பெற்ற வாழ்த்துக்களைப் படித்தபோதும் நண்பர் சிலர்க்கு நம்பிக்கையின்மையால் என்மீது குறை கூறிவந்தனர். எனக்கு ஒன்றின்மீது முழு நம்பிக்கை ஏற்பட்டாலன்றி அதனை வெளியிட யான் ஒரு போதும் துணியமாட்டேன். அஃதெனக்கு இயல்பாக அமைந்த பண்பு. எனக்கு உள்ளபடி நம்பிக்கை ஏற்பட்டு யான் அதைப்பற்றிச் செல்வியில் வெளியிடுவதையோ பேசுவதையோ சிலர் குறைகூறின் யான் அதனைப் பொருட்படுத்தவு மாட்டேன்.

ஆவியுலகுவாழ் பெருமக்கள் தருஞ் செய்திகளை வாங்கிக் கொடுக்கும் ஆற்றல் எங்கோ ஒரு சிலரிடம் மட்டுமே அமைந்திருக்கிறது. நிலத்தினடியிலுள்ள நீரோட்டத்தைக் கண்டு பிடிப்பவர் (Water-Diviner) எங்கோ ஒரு சிலர் இருப்பதைக்

*இவர்கள் வரலாறும் உருவப்படமும் செல்வி சிலம்பு 34 பக்கங்கள் 89, 90இல் காண்க.

காண்கின்றோம். இப்படிச் சிற்சில துறைகளில் தனிப் பேராற்றல் படைத்தவர் ஒரு சிலரை எங்கோ காண முடிகின்றது.

மறைத்திரு மறைமலையடிகளார் எழுதிய நூல்களைப் படித்தவர்களும், அவர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டவர்களும், சென்னையில் அவர்கள் பெயராலுள்ள நூல் நிலையத்தில் அவர்கள் ஆய்ந்த நூல்களைப் படிப்பவர்களும் அவர்கள் காணுவுலகினின்றும் தொடர்பாளர்வழி விடுத்த கருத்துரை வாழ்த்துரைகளை நம்பாவிடின் நம்பாதவர்களின் குறையேயன்றி அடிகளார்பாலோ என்பாலோ குறை கூறுவ தற்கில்லை. அவர்கள் இப்பூவுலகில் வாழ்ந்தகாலை எழுதிய மரணத்தின்பின் மனிதர் நிலை (இறந்தபின் உயிர் இருக்கும் நிலை), தொலைவிலுணர்தல், யோக நித்திரை (அறிதுயில்), மனித வசியம் (மனக் கவர்ச்சி) ஆகிய நூல்களை ஒவ்வொரு வரும் கட்டாயம் படித்தல் வேண்டும். அடிகளார் தம் மகனார் மறைத் திருநாவுக்கரசுக்கு இளமையிலே ஏற்பட்டுள்ள ஈளை நோ(Asthma)யை அறிதுயில் (Hypnotic sleep) முறையில் நலப்படுத்தியுள்ளனர்.

மேலே குறிப்பிட்ட ஆவியுலகத் தொடர்பாளர் திரு குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் அடிகளார் எழுதிய 'தொலைவி லுணர்தல்' என்னும் நூலைப் படித்துக்கொண்டிருந்தபோது ஆவி யுலகில் வாழும் அடிகளார் தொடர்பு தற்செயலாகக் கிடைத் ததாம். அடிகளாரும் அவர்தம் தனிப் பேராற்றலை அறிந்து பாராட்டியதோடு அவர்வழிக் கழகத்துக்கு வேண்டிய நன்மை களைச் செய்தருளினர்; செய்தும்வருகின்றனர். 'He is the best medium in India' என்று அடிகளார் ஒருமுறை திரு குற்றாலலிங்கம் பிள்ளை அவர்களைப்பற்றிக் கூறியுள்ளனர்.

அங்ஙனம் கூறியதற்குரிய காரணங்களை அடியிலே விளக்குகிறேன்.

பலகை (Puja Board) வழி ஆவிகளுடைய கருத்துக்களை அறிதல். இதனைப் பெரும்பான்மையோர் கையாளுகின்றனர். 40க்கு 40 செ.மீ. அளவிலுள்ள சதுரப் பலகையின் நான்கு விளிம்புகளிலும் சட்டம் அடித்துக் கொள்ளுதல். உட்புறம் நான்கு ஓரங்களிலும் A B C D என்ற 26 ஆங்கில எழுத்துக் களைச் சம அளவிட்டு எழுதிக்கொள்ளவேண்டும். 5 செ.மீ. குறுக்களவுடைய வட்ட மரத்துண்டைப் பலகையின் நடுவில் வைத்தல்வேண்டும். இறைவனை வேண்டி அவ்வட்டத் துண்டின்

மேல் கைவிரல்களை வைத்துத் தாம் விரும்பும் ஆவியை மனத்தில் நினைத்துக் கூப்பிட்டால் சிலர்க்கு அத்துண்டு எழுத்துக்களின் பக்கம் கையை இழுத்துச் செல்வதைப் பார்க்கலாம். இத் தகைய நிகழ்ச்சி ஒரு சிலர்க்குத்தான் ஏற்படும். அப்படி எவ்வெவ்வெழுத்துகளுக்குத் தொடர்ந்து இழுத்துச் செலுத்து கின்றதோ அவ்வெழுத்துக்களை ஒன்றன்பின் ஒன்ருக இணைத்துப் பொருள் கொள்ளலாம். 'நான்' என்ற சொல்லைக் குறிப்பதற்குக் கையை முதற்கண் Nக்கும் அடுத்து Aக்கும், அடுத்து Nக்கும் இழுத்துச் செல்லும். இந்த முறையைத்தான் சிலர் கையாளுகின்றனர்.

ஆனுல், திரு குற்ருலலிங்கம் பிள்ளை அவர்கட்குப் பல கை தேவையில்லை, அவர்கள் மனத்தில் ஆவிகள் தாம் விரும்பும் கருத்துக்களை உணர்த்தி அவர்களைக் கொண்டே எழுதச் செய்கின்றன. அப்படி எழுதப் பெறுவன திரு பிள்ளை அவர்களின் சொந்தக் கையெழுத்தாக இருக்கும். ஆவிகளிற் சில திரு பிள்ளையவர்கள் கையைப் பிடித்து எழுது கின்றன. அப்படி எழுதப்பெறுவன திரு பிள்ளை அவர்க ளுடைய கையெழுத்தாகவுமில்லை; நமக்குத் தெரிந்த ஆவி களின் கையெழுத்தாகவுமில்லை. நாமே நம் நண்பர் கையைப் பிடித்து எழுதுவோமானுல் இதனை நன்கு புரிந்து கொள்ள லாம். இப்படிக் கட்டுரை, வாழ்த்துரைகளிற் சில திரு பிள்ளையவர்கள் கையெழுத்திலேயே உள்ளன. சில வெவ்வேறு கையெழுத்துக்களில் காணப்பெறுகின்றன. எனக்குத் தெரிந்து காலஞ்சென்ற ஆவிகளுடைய கட்டுரை வாழ்த்துக் களிலிருந்து அதனை அறியலானேன். அவற்றை யெல்லாம் யான் பாதுகாத்து ஒரு கோப்பிலே வைத்திருக்கின்றேன்.

மற்றுமோர் அற்புத ஆற்றலும் தொடர்பாளர் திரு பிள்ளை யவர்களிடம் காணப்பெறுகின்றது. ஆவிகள் திரு பிள்ளை அவர்கள் உடலுக்குள் புகுந்து அவர்கள் குரலை மாற்றித் தங்கள் குரலில் பாடுவதும் பேசுவதுமாகும். இந்த முறையை 'Ectoplasm' என்கின்றனர். இப்படி ஆவிகள் பேசுகின்றன என்பது தெரிந்தபின் சென்னையில் நாடாப் பதிவுப் பொறி (Tape Recorder) ஒன்றை விலைக்கு வாங்கினேன். அதைப் பற்றிய செய்திகளை யெல்லாம் பின்வரும் கட்டுரைகளில் விளக்கப்படும்.

மறைமலையடிகளார் விருப்ப ஆவணத்தின்மேல் எழுந்த வழக்கு முடிபும், கழகம் ஆண்டுதோறும் அறநிலையங்கட்குக் கழக விதிகளின்படி ஒதுக்கிவரும் பேர்பாதி ஆதாயத்துக்கு

வருமானவரி விலக்குப் பெறுவதற்கு அடிகளார் காட்டிய வழியிற் சென்று பெற்றதும் செந்தமிழ்ச்செல்வி சிலம்பு 48, 12ஆம் பரலிலும், சிலம்பு 49, முதற் பரலிலும் முறையே விளக்கப் பெற்றிருக்கின்றன. உற்றகாலத்தில் திரு குற்ருலலிங்கம் பிள்ளை அவர்கள்வழி மறைத்திரு மறைமலையடிகளார் வெற்றி பெறத்தக்க வழிகளை உணர்த்தாவிடில் பெருந் தொல்லைகட்கு ஆட்படுவதோடு மறைமலையடிகள் நூல்நிலையத்தை இந்த அளவுக்குப் பயன்படும் வகையில் நடத்தமுடியாத நிலை ஏற்பட்டிருக்கும்.

இனி முதன்முதல் 1959இல் தொடர்பாளர் திரு. குற்ருல லிங்கம் பிள்ளை அவர்கள்வழி 1944இல் இறையடி சேர்ந்த என்அருமைத் தமையனரும் கழகத்தை நிறுவியவருமான திருவாளர் திருவரங்கனரவர்கள், 1945இல் இறையடி சேர்ந்த என் அருமைத் தமையனரின் இன்னுயிர்த் துணைவியாரும் மறைத்திரு மறைமலையடிகளாரின் மகளாருமாகிய தனித்தமிழ்த் திருவாட்டி நீலாம்பிகையம்மையார் அவர்கள், 1950இல் அம்மை அம்பலவாணர் கழலடி சேர்ந்த மறைத்திரு மறைமலை யடிகளார் ஆகிய மூவரோடும் பேசும் வாய்ப்புங் கிடைக்கப் பெற்றிருக்காது.

என் அருமைத் தமையனரும் அருமை அண்ணியாரும் 1944இலும் 1945இலும் முறையே இறையடி சேர்ந்தபின் கழகப் பொறுப்பினையும் என் தமையனர் குடும்பப் பொறுப் பினையும் யானே ஏற்று நடத்த வேண்டியவனனேன். 73 அகவை நிறைந்த என் அருமைத் தாயார் பாளையங் கோட்டையில் என் தமையனரோடு இருந்தார். என் அருமைத் தமையனர்க்கு 16 அகவை முதல் 3 அகவை வரையுள்ள ஆறு பெண் மக்களும், இரு ஆண் மக்களும் உள்ளனர். எனவே என் மனைவியையும் என் பெண்மக்கள் இருவரையும் பாளையங் கோட்டையிலே குடியிருக்கச் செய்ய வேண்டியதாயிற்று. திருநெல்வேலியில் தலைமை நிலையமும் சென்னையில் கிளை நிலையமும் இருப்பதால் யான் அங்கும் இங்குமாகப் போய் வந்து கழகப் பணிகளைச் செய்து வந்தேன். என் அருமைத் தமையனர் பெண் மக்கள் அறுவரில் மூன்ருவது பெண் செல்வி வேலம்மை பள்ளியிலிருந்து வீட்டுக்கு வந்ததும் மயக்க முற்றுச் சில மணி நேரங்களில் இறையடி சேர்ந்தனள். மற்றும் பெண் மக்கள் ஐவரில் இருவர்க்குப் பாளையங்கோட்டையிலேயே திருமணம் நடைபெற்றது. 1952இல் என் அருமைத் தாயார் இறையடி சேரவே என் குடும்பத்தையும் தமையனர் மக்களையும் 1953இல் சென்னைக்கு அழைத்து வந்தேன். பெண் மக்கள்

மூவரில் இருவர்க்குச் சென்னையில் 1954இல் திருமணம் நிகழ்ந்தது. கடைசிமகள் செல்வி மங்கையர்க்கரசிக்குமட்டும் திருமணம் ஆக வேண்டியிருந்தது.

1959 மே 4இல் நெல்லையில் நடைபெற்ற பங்காளிகளின் கூட்டத்துக்குப் போகும்போது என் மனைவியோடு செல்வி மங்கையர்க்கரசியையும் அழைத்துச் சென்றேன். செல்வி மங்கைக்குத் தகுந்த கணவன் கிடைக்கப்பெறின் நெல்லையிலே திருமணத்தை நடத்திவிடக் கருதினேன்.

11—5—1959இல் சிவகிரி உயர் பள்ளியில் தமிழாசிரியர் ஒருவர் இருப்பதறிந்து யானும் கழகத் தலைமை எழுத்தர் திரு பிச்சுத்தாயப்பனும் உந்து வண்டியில் சிவகிரிக்குப் போய் மாப்பிள்ளையைப் பார்த்தோம். அவர் கடவுள் நம்பிக்கை யில்லாதவர் எனக் கேள்வியுற்றோம். பெண்ணைப் பார்ப்பதற்கு அவர்தம் உடனுசிரியரும் அவர்தம் மனைவியாரும் எங்களோடு வந்தனர். பெண்ணைப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது எனது கருத்தினைக் கேட்டனர். பின்னர் எழுதித் தெரிவிப்ப தாகச் சொல்லி அவர்களை அனுப்பி வைத்தேன்.

அப்போது கழக நிலையத்திலே நடைபெற்று வந்த சிவஞான முனிவர் நூல் நிலையத்தின் நூலகராகவும் திருவள்ளுவர் புலவர் கல்லூரி முதல்வராகவும் பேராசிரியர் பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கள் இருந்தனர். கழக நிலயத்தின் வடபுறம் நெல்லையப்பர் திருக்கோயில் தென்கிழக்குப் புறமதிலோரத்திலுள்ள கடைகள் ஒன்றில் சிறிய அளவில் பலசரக்கு மளிகை நடத்தி வரும் திரு இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளையவர்கள் ஆவியுலகத் தொடர் பாளராக மறைத்திரு மறைமலையடிகளாரோடு பேசி வருகின்றனர் என்று பேராசிரியரவர்கள் சொன்னார்கள். எனவே திரு பிள்ளை அவர்களை இரவு 8 மணிக்குக் கழக நிலயத்துக்கு வரும்படி வேண்டினேன்.

அவர்கள்வழி மறைத்திரு மறைமலையடிகளாரும் என் அருமை அண்ணனும், அண்ணியாரும் என்னோடு பேசினர். தொடர்பாளர் திரு பிள்ளை யவர்கள் ஒரு வெள்ளைத் தாளில் ஊற்றுப் பேனவைக் கொண்டு கிறுக்கிக் கொண்டே யான் கேட்ட கேள்விகட்கெல்லாம் விடை கூறினர். அம்மூவரும் என் னிடம் பேசுகின்ற முறையில் அப் பேச்சுக்கள் அமைந்திருந்தன. அடிகளார் என்னிடம் "நீர் இன்று என் பேர்த்திக்கு ஒரு மாப்பிள்ளை பார்த்து வந்தீரே; என்ன முடிவு சொன்னீர் என்று

கேட்டுப் பின் அந்த மாப்பிள்ளைக்குக் கொடுத்தல் வேண்டா. சென்னையிலிருந்து வரும் வழியில் விருதுநகரில் மற்றொரு மாப்பிள்ளையைப் பார்த்து வந்தீரே'' என்று கேட்டார்கள். ஆம்; அவர் தொலைபேசித் துறையில் வேலை பார்க்கின்றனர் என்றேன். ''அவருக்கே பேர்த்தி செல்வி மங்கையர்க்கரசியை மணஞ் செய்து கொடுப்பதற்கு முயலவும், நடைபெறும். திருமணத்தைத் திருப்பரங்குன்றத்திலேதான் நடத்துதல் வேண்டும்'' என்றனர். அடுத்து ''நும் இளைய மகள் செல்வி வயிரமணியின் திருமணத்தையும் நடத்த வேண்டியது தானே'' என்றார்கள். யான் ''அவள் பள்ளி யிறுதித் தேர்வில் வெற்றி பெற்ற செய்தி அண்மையிலேதான் தெரியலாயிற்று. அவளுடைய திருமணத்தை இப்போது செய்யக் கருத வில்லையே' என்றேன். ''திருமணத்திற்குரிய வேளை வந்து விட்டது. ஆதலால் காலந்தாழ்த்தாது அவள் திருமணத்தை யும் முடித்து விடவும்'' என்றார்கள். ''மாப்பிள்ளை எங்கே இருக்கிறார்'' என்று கேட்டேன் உடனே அடிகளார் ''என் பெயரிலுள்ள நூல்நிலையத்தில்தானே இருக்கிறார்'' என்று சொன்னதும் எனக்கும் என் மனைவிக்கும் வியப்பினைத் தந்தது. அந்தத் திருமணத்தையும் திருப்பரங்குன்றத்திலேதான் நடத்துமாறு வற்புறுத்தலாக அடிகளார் கூறினர்.

திருமணப் பேச்சுக்குப் பின் வருமானவரித் துறையினர் அறத்துக்கு ஒதுக்கப்பட்ட தொகைக்கு வரி விதித்ததைப் பற்றிய பேச்சு நடைபெற்றது.

14—5—1959இல் சங்கரன் கோயிலில் அருள்மிகு கோமதியம்மை சங்கர நாராயணரை வணங்கியபின் பாம்பக் கோயில் சந்தைக்குப் போய் என் மருமகள் செல்வி பிச்சம்மை யிடமும் அவள் கணவனிடமும் பேரன் அ. கோமுவின் திருமணம் பற்றிப் பேசிவிட்டு விருதுநகருக்குச் சென்றேன். என் தங்கை மகன் செல்வன் திருஞானம் விருதுநகரில் தொலைபேசித் துறையில் பணியாற்றி வந்தனர். 18—5—79 இல் பாம்பக் கோயில் சந்தைக்குப் போய்த் திருமணத்தை உறுதி செய்து எழுதும்படி சொல்லிவிட்டுச் சென்னைக்குச் சென்றோம்.

22—5—59இல் சென்னையில் என் மைத்துனர் திரு ஆ. இராச கோபால பிள்ளையவர்களிடம் பேசி என் இளைய மகள் வயிரமணி, மருமகன் முத்துக்குமாரசாமி ஆகியோர் திருமணமும் உறுதிசெய்யப்பெற்றது.

மறைத்திரு மறைமலையடிகளார் தெரிவித்தருளியபடி திருப்பரங்குன்றத்தில் 21—6—1959இல் என் அருமைத் தமையனார் மகள் செல்வி மங்கையர்க்கரசி, அருமைப் பேரன் செல்வன் அ. கோமு ஆகியோர் திருமணமும், 24—6—1959 இல் என் இளைய மகள் செல்வி வயிரமணி, மருமகன் இரா. முத்துக்குமாரசாமி ஆகியோர் திருமணமும் மிகவும் சிறப்புடனும் திருவருட் பொலிவுடனும் நடைபெற்றன. திருமணங்களைத் தமிழ் முறையில் நடத்தி வைத்தவர் கழகப் புலவர் சித்தாந்த பண்டிதர் ப. இராமநாத பிள்ளை அவர்களாவர். ஒவ்வொரு திருமணமும் முடிந்தவுடன் மணமக்களை மேள தாளத்தோடு அழைத்துக்கொண்டு அருள்மிகு திருப்பரங்குன்றத் திரு முருகன் திருக்கோயிலுக்குச் சென்று வழிபாடாற்றி வந்தமை வந்திருந்தோர் அனைவர்க்கும் பேருவகை அளித்தது. இருதிருமணங்கட்கும் ஆவியுலகத் தொடர்பாளர் வழிக் காணுவுலகு வாழ்நர் மறைத்திரு மறைமலையடிகளார் எழுதிய வாழ்த்துக்கள் அச்சிடப்பெற்று வந்தன என்பது யாவருக்கும் வியப்பை விளைத்தது.

என் இளைய மகள் செல்வி வயிரமணி திருமணத்தை அப்போது நடத்த வேண்டுமென்று யானும் என் மனைவியும் கருதாதிருப்பினும் என் மகளும் மருமகனும் முறைப் பெண், முறை மாப்பிள்ளை என்ற முறையில் அவர்களுக்குள் உடன்பாடு இருந்தமையினை யாங்கள் அறியாதிருப்பினும் காணுவுலகு வாழ்நர் மறைத்திரு மறைமலையடிகளார் அறிந்திருந்தனர் என்பது புலனாயிற்று.

கழகப் பொது மேலாளரும் என் மூத்த மருகருமாகிய திரு இரா. கலியாணசுந்தரம் குடும்பமும், இளையமருகர் திரு இரா. முத்துக்குமாரசாமி குடும்பமும் சென்னை, தம்புச்செட்டித் தெரு 176ஆம் எண் இல்லத்தின் மாடியில் குடியிருந்தனர் இரு குடும்பமும் அந்த வீட்டிலே குடியிருப்பதற்கு இடம் போதாமை கண்டு அவர்களுக்கென விலைக்கு வீடொன்று வாங்குவதற்குத் திட்டமிட்டுத் தரகரிடம் சொல்லி வைத்தேன். தம்புச் செட்டித் தெருவிலிருந்து பிரிந்து இலிங்கிச் செட்டித் தெருவைக் கடந்து கீழ் மேலாகச் செலலும் மேட்டுத் தெரு 3ஆவது எண்ணுள்ள வீடு உடனே விலைக்கு அமைந்துவிட்டது. அப்படி அமைந்தது அடிகளார் காட்டியவழி என்று சொன்னால் அது மிகையாகாது.

வ. சு.

(தொடரும்)

———

## சிறந்த பண்பாளர்
## மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள்

அறிவும் திருவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற நடுவணரசு நிதியமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் பல்துறை வல்லுநர் ஆவார்கள். கடந்த முப்பதாண்டுகட்கு மேலாகத் தமிழக அரசியல் தலைவர்களில் ஒருவராகத் திகழும் திரு. சுப்பிர மணியம் அவர்களின் அறிவாற்றல் மறைந்த மாபெருந் தலைவர் ஜவகர்லால் நேரு அவர்களின் உள்ளங் கவர்ந்ததனுல் அவர் நடுவண் அரசுக்கு முக்கியப் பொறுப்பேற்க அழைக்கப் பெற்ருர்.



திரு. சி. சு. அவர்கள் கல்லூரியில் படிக்கும் நாள்களிலேயே இலக்கிய ஆர்வமும் அரசியல் ஈடுபாடும் கொண்டு விளங்கினர். சட்டப்படிப்பு முடித்த பின்னர் அவர் வழக்குரைஞராகப் பணியாற்றியதைவிட அரசியலிலேயே முழு நேரத்தையுஞ் செலவிட்டாரெனலாம். அவர்தம் சுறுசுறுப்பும் படைப்புத்திறனும் அன்று தமிழகத்தின் முதலமைச்சராய்த் திகழ்ந்த இராஜாஜி அவர்களைப் பெரிதும் கவர்ந்தன. இராஜாஜி உடனே அவரைத் தம் அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டார். பின் பெருந் தலைவர் காமராசர் அவர்கள் முதல்வர் பொறுப்பை ஏற்றபோதும் திரு. சி. சு. அவர்கள் தொடர்ந்து அமைச்சராகவே திகழ்ந்தார். கல்வி, நிதி ஆகிய சிறப்புத் துறைகள் இரண்டின்வழி அவர் தம் ஆட்சிக் காலத்தில் தமிழகத்திற்குப் பேருதவி செய்தார்.

அன்னைத் தமிழுக்குச் சிறப்பிடம் கொடுக்க வேண்டி அவர் கல்லூரிகளில் தமிழ்வழிப் பல்வேறு பாடங்களை நடத்துவதற்குத் திட்டம் வகுத்துக்கொடுத்தார். எல்லாப் பாடங்களையும் தமிழில் நடத்த முடியுமா என்று அறிஞர்களும் அரசியல்வாதிகளும் வினு எழுப்பியபோது 'தமிழில் முடியுமா?' என்ற தலைப்பில் நூலொன்றை எழுதி எல்லாப் பாடங்களையும் தமிழ் வழியாக நடத்த முடியுமென்று நிறுவிக்காட்டியவரும் ஆவர்.

நேருப் பெருமகனாரின் விருப்பத்திற்கிணங்க நடுவண் அரசின் அமைச்சராக அவர் பதவி ஏற்றபோதும் தமிழ்நாட்டின் நலன்களையே தம் நலனாகக் கருதித் தமிழ்நாட்டிற்கு வேண்டிய எல்லா உதவிகளையும் அவர் செய்யத் தயங்கவில்லை.

பின்னர் இந்திரா அம்மையார் தலைமையமைச்சராகப் பணியேற்றதும் திரு. சி. சு. அவர்கள் தம் அமைச்சரவையிலும் இருக்கவேண்டுமென்று விரும்பி ஏற்றுக்கொண்டதோடன்றி நாட்டின் பல முக்கியமான சிக்கல்களைத் தீர்ப்பதற்கு அவருடன் கலந்து பேசுவார்.

கடமையைச் செய்வதில் கண்ணுங்கருத்துமாயிருப்பவர்; நேர்மை தவறாதவர்; பழகுவதற்கு இனியர்; காண்பதற்கு எளியர்; எதையும் சிந்தித்துச் செயலாற்றும் செயல் வீரர்; இன்சொல்லினர்; யாருக்கும் தேவையான உதவியைக் காலத்தே செய்யும் அருளாளர்; ஆற்றல் மறவர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் ஆவர்.

'இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி'யின்போது பச்சிளம் பாலர்கள் பருந்துபோல் சுடப்பட்டு வீழ்த்தப்பட்ட செய்தி கேட்டு, துடிதுடித்துத் தம் அமைச்சுப் பொறுப்பை மறுத்துவிட்டுவந்த மாமதியமைச்சர் ஆவர். தமிழகத்தில் இன்று விண் பொய்த்த தால் ஏற்பட்டுள்ள வறட்சிநிலையை நேரில் அறியவந்து, மாண்புமிகு டாக்டர். கலைஞர் அவர்களைக் கண்டு பேசி ஏழரைக் கோடி ரூபாயை முதல் தவணையாக உடனே வழங்கிய அருட் செல்வராவர்.

சைவத்திற்கும் தமிழுக்கும் அயராது தொண்டாற்றி வருவது 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' என்று உணர்ந்து அதற்கு இடையூறு ஏற்பட்டபோதெல்லாம் முன்னின்றுதவிய பேரருளாளர் ஆவர்.

மறைத்திரு மறைமலையடிகளார் வாழ்ந்த மாளிகையை வாங்கி அதைக் கலைமன்றமாக அமைக்க வேண்டுமென்று கழக ஆட்சியாளர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா அவர்கள் கூறிய போது உடனே நடுவண் அரசிலிருந்து 25,000 ரூபாயும் தமிழக அரசிலிருந்து 10,000 ரூபாயும் நன்கொடையாகப் பெற்றுத் தந்தவர் ஆவர். அவர் 'காலத்தே' செய்த அவ் வுதவியினால் தான் இன்று மறைமலையடிகளாரின் மாளிகை தனியார் கைக்கு மாறாது 'கலைமன்றமாக'த் திகழ்கிறது. சுற்றுலாக் கவின்கூடங் களில் ஒன்றாகவும் ஏற்கப்பெற்றுள்ளது.

மறைமலையடிகள் நூல்நிலையத்தை நடத்துவதற்கென்று கழகம் ஒதுக்கிவரும் அறநிதிக்கு நடுவண் அரசு வரிவிதித்த

போது திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் பெருமுயற்சி எடுத்துக்கொண்டு வரிவிலக்கு அளிப்பதற்கு உதவியதோடன்றி எதிர்காலத்திற்கும் நிலையான வரிவிலக்கைப் பெற்றுக் கொடுத்துள்ளார்.

இவ்வாறு கழகம் செய்யும் நல்ல பணிகள் நடைபெறுவதற்குத் தடங்கல்கள் ஏற்படும்போதெல்லாம் 'தமிழ்க் கடவு'ளான முருகப்பெருமானே உருவெடுத்து வந்ததுபோல் பல்வேறு உதவிகளைச் செய்துவரும் 66ஆவது அகவை எய்திய திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் நீடுழி வாழ அருள்புரிய வேண்டுமென்று அம் முருகப்பெருமானையே வேண்டுகிறோம்.

முருகப் பெருமான் பெயருடைய இவர்கள் இவ்வாண்டு 66ஆவது அகவை எய்தியதால் (6, 6+6=12) அவ்வெண் ஆறு முகங்களையும், பன்னிரு கைகளையும் குறிக்குமாதலால் முன்னை விட இவ்வாண்டில் எதிர்பாராத வகையில் பேராற்றலும், பெரும் புகழும் பெறுவர் என்பது திண்ணம்.

1968 அக்டோபர் 14ஆம் நாள் நடுவணரசு நிதியமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் கழகம் நடத்திய திருவள்ளுவர் விழாவிலே கலந்து தவயோகி சுத்தானந்த பாரதியார் ஆக்கிய திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலை வெளியிடுமுன் ஆற்றிய சிறப்புரை.

"அண்மைக்காலம் வரை நம் நாட்டுத் தூதுவர்கள் (Ambassadors) வெளிநாடுகளுக்குச் சென்று அவர்கள் அங்கு அத்தாட்சிப் பத்திரம் கொடுக்கும்பொழுது அத்துடன் 'கீதைப் புத்தகம்' ஒன்றையும் கொடுப்பது வழக்கமாக இருந்துவந்தது. யான் 1961இல் அமெரிக்கா சென்றபொழுது குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூற்படிகளை எடுத்துச் சென்று அங்கு அப்போது இந்திய நாட்டுத் தூதுவராக இருந்த திரு B. K. நேரு அவர்களிடத்திலே அவற்றில் ஒரு படியினைக் கொடுத்தேன். அவர் மனைவியாகிய ஆங்கில மாது அதனைப் படித்து ஏன் கீதையை மட்டும் கொடுத்தல் வேண்டும். திருக்குறளையும் கொடுக்கலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார்களாம். அது முதல் திரு B. K. நேரு பல வெளி இடங்களுக்குச் செல்லும்போது கீதைக்குப் பதில் திருக்குறளையே கொடுத்துவந்தார்.

நான் விரும்புவதெல்லாம் கூடியவிரைவிலே தமிழறிஞர் ஒருவர் தமிழ் நூலொன்றெழுதி அந்த நூலுக்காக 'நோபல் பரிசு' பெறுதல் வேண்டுமென்பதே. அதுதான் நம்முடைய இலக்காக இருத்தல் வேண்டும்."

---

# அஃறிணை ஊமனும் கூகைக் கோழியும்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

குறுந்தொகை 224ஆம் பாட்டில் 'உயர்திணை ஊமன்' என்ற சொல்வழக்கு வருகின்றது. இஃது அஃறிணை ஊமனை ஒரு வகை ஆந்தையை மறைமுகமாகக் குறிப்பிடுகின்றது.

"கவலை யாத்த அவல நீளிடைச்
சென்றோர் கொடுமை யெற்றித் துஞ்சா
நோயினு நோயா கின்றே கூவற்
குராலான் படுதுய ரிராவிற் கண்ட
உயர்திணை யூமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே".

—குறுந்தொகை, 224.

அஃறிணையாகிய கோட்டானுக்கும் ஊமன் என்ற பெயர் வருதலின் உயர்திணை ஊமன் என்று இப் பாட்டில் சொன்னதாக விளக்கம் கூறுவர். உயர்திணை ஊமன் என்பது வெளிப்படை என்னும் இலக்கணத்தின்பாற்படும் என்பர். ஊமன் என்பது ஒருவகைக் கோட்டான் என்ற பெரிய ஆந்தையைக் குறிக்கும். இந்தப் பாட்டில் உயர்திணை ஊமனைச் சுட்டிய வரிக்கு முன்வரும் வரியில் 'குராலான்' என்ற சொல் வருவதைக் கவனிக்க வேண்டும். குராலான் என்றும் உயர்திணை ஊமன் என்றும் கூறியதில் ஒரு நுண்ணிய செய்யுள் நயம் இருப்பது தெரிகின்றது. குரால் என்பது அஃறிணையாகிய கோட்டானைக் குறிக்கும். சங்கநூல்களில் குரால் (Scops owl) என்ற பெயர் ஒருவகைச் சிறிய கோட்டானைக் குறித்தே வழங்கியுள்ளது. இந்தக் குராலாகிய கோட்டானிலிருந்து குரால்நிறப் பசுவைப் பிரித்துக்காட்டவே 'குரால் ஆன்' என்று கூறினர். குரால் என்ற கோட்டானின் பெயரோடு ஆன் என்ற சொல்லை இணைத்து வேறு பொருள் பெற வைத்ததுபோலவே ஊமன் என்ற கோட்டானின் பெயர் முன்னர் உயர்திணை என்ற சொல்லை இணைத்துப் பிறிதொரு பொருள் பெற வைத்த நயம் போற்றுதற்குரியது. இந்தப் பாட்டில் இரண்டு வகைக் கோட்டான்களை மறைமுகமாகக் கூறிய நயமும் உள்ளது. இந்த நயத்தின் சிறப்பை உணர்ந்த கல்லாட ஆசிரியரும் ஊமை கண்ட கனவு என்ற

பழமொழியைப் பயன்படுத்துமிடத்து 'ஆரிய ஊமன் கனவு' என்று கூறினர்.

> "புக்கதே வினர்தம் பொருகடற் படையினை
> ஆரிய வூமன் கனவென வாக்கிய
> கூடற் பெருமான் பொதியப் பொருப்பகத்"
>
> —கல்லாடம் 4, வரி 7-9.

மனிதரில் ஊமையைக் குறுந்தொகை உயர்திணை ஊமன் என்று குறிப்பிட்டது. அதையே ஆரிய ஊமன் என்று கல்லாட ஆசிரியர் குறிப்பிடுகிறர். ஆரிய என்ற சொல் இங்கு உயர்திணையைக் குறித்ததேயாகும். இனப் பாகுபாட்டைக் குறித்தது அன்று. ஊமன் என்ற பெயர் கோட்டானைக் குறித்துச் சங்க நூல்களில் எங்குமே பயிலவில்லை. ஆனல், அதைக் கொண்டு ஊமன் என்ற பெயர் சங்ககாலத்தில் வழங்கவில்லை என்று கூறக்கூடாது. ஏனென்றல் உயர்திணை ஊமன் என்று குறுந்தொகையே அஃறிணை ஊமனாகிய கோட்டானைக் குறிப்பிட்டதைக் காணும்போது சங்ககாலத்தில் ஊமன் என்ற பெயர் கோட்டானைக் குறித்து வழங்கியே இருக்க வேண்டும். 'ஊமன் பாராட்ட உறங்கிற்றே' என்று முத்தொள்ளாயிரத் திலும், 'சிறுகூகை யுட்க விழிக்க வூமன் வெருட்ட' என்று திருவாலங்காட்டுத் திருப்பதிகத்திலும் ஊமன் என்ற பேராந்தை தமிழிலக்கியத்தில் குறிக்கப்படுகின்றது. குரால் என்பது தலையில் இரு கொம்புகளை உடைய சிறிய ஆந்தை வகையாகும். ஊமன் என்பது தலையில் இரு கொம்புகளை யுடைய பெரிய ஆந்தையாகும். இதை ஊமைக்கோட்டான் என்று கூப்பிடுவர். இந்தக் கொம்புகள் இறகினல் ஆனவை.

குரால் என்ற சொல் சிவந்த பழுப்பு நிறத்தைக் குறிக்கும். கபில நிறமென்று கூறுவர். குரால் பசு என்ற வழக்கு பசுக் களின் அடையாள நிறமாக இன்றும் வழங்குகின்றது. காரி, மயிலை, குரால், சிவலை என்ற பெயர்கள் மாடுகளின் நிறத்தைக் குறிக்கப் பயன்படும் சொற்களாகும். குரால் என்று கோட்டா னுக்குப் பெயர் வந்த காரணம் அதன் செம்பழுப்பு அல்லது குரால் நிறத்தின் (Rufous brown) காரணமாகவே யாகும். தகடூர் யாத்திரையில் கருநிறக் காக்கை, வெண்ணிறக் கூகை என்று கூகையின் நிறத்தைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். கூகையின் பொதுவான நிறம் வெண்மையே. மலையாளத்தில், பேச்சுவழக்கில் 'வெள்ளி மூங்கா' என்று வெள்ளை நிறமான கூகையை அழைக்கின்றனர். மூங்கா என்ற சொல்

நன்னூலிலும் ஆந்தையைக் குறித்து வருகின்றது. ஊமன் என்ற பெயர் இந்தப் பேராந்தை 'ஊம் ஊம்' என்று ஓசையிடும் காரணமாக வந்ததே யாகும். கி. மு. 5,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட எகிப்திய மொழியில் 'ம்' என்று ஒலிக்கும் எழுத் தைக் குறிப்பிட ஆந்தையின் உருவெழுத்தைப் பயன்படுத் தினர். தமிழ்மொழிக்கும் ஒருவகை உருவெழுத்து பண்டைக் காலத்தில் இருந்திருக்குமானுல் ஊமனின் உருவமே எழுத் தாகப் பயன்பட்டிருக்கும். பிராமி எழுத்தே அரப்பா நாகரிகத்தில் காணப்பட்ட உருவெழுத்திலிருந்து வளர்ச்சி பெற்று மாறியதாக அறிஞர் சிலர் கருதுகின்றனர். நாகர் களிடையே தங்கள் பெயரைச் சொல்லக் கூடாது என்ற வழக்கம் உள்ளது. ஊமைக்கோட்டான் தன் பெயரைத் திரும்பித்திரும்பித் தானே சொல்வதுபோல் மனிதனும் சொல்லக்கூடாது என்று நாகர்கள் கூறுவராம். இத்தகைய கருத்து வெளிநாடுகளிலும் மக்களிடையே நிலவுகிறதாம். அஃறிணை ஊமன் திருப்பித்திருப்பி 'ஊம் ஊம்' என்று ஓசை யிடுவதால்தான் தமிழிலும் 'ஊமன்' என்ற பெயர் தோன் றிற்று. மலையாளத்தில் திருவாங்கூர்ப் பகுதியில் ஊமன் என்றே பாமர மக்கள் அழைக்கின்றனர். வெளிநாட்டு மொழிகளிலும் இதன் பெயர் இது வெளியிடும் ஓசையின் காரணமாகவே வந்ததாகக் கூறுவர். (The names imitate the bird's note, names of the birds wholly onomotopoetic in origin-The Journal of Royal Asiatic Society—1924).

கூகைக் கோழி என்ற பெயர் புறநானூற்றுப் பாடலில் வருகின்றது.

> "முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
> கூகைக் கோழி யானுத்
> தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே". —புறம், 364.

'அவனைக் கூகைக் கோழியார் பாடியது' என்று அடிக்குறிப்பில் கூறப்பட்டுள்ளது. 'கூகைக் கோழி' என்று சொல்லியதால் ஆசிரியர் பெயர் பெற்றுர் என்று உ. வே. சாமிநாதையரும் பிறரும் கூறியுள்ளனர். ஆனுல் கூகைக் கோழி என்ற பெயர் குறுந்தொகைப் பாடலிலும் வருகின்றது.

> "மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
> முயங்கிய நாடவச் சிலவே யலரே
> கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
> பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்

களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கோங்க ரார்ப்பினும் பெரிதே''.
—குறுந்தொகை, 393.

ஆனால், இப் பாட்டைப் பாடியவர் பரணர் என்று கூறப்பட்டுள்ளது. ஆதலின் கூகைக் கோழி என்று பாடியதால் புறப் பாடலைப் பாடிய புலவர் பெயர்பெற்றார் என்று கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை. புறநானூறு 364ஆம் பாட்டைப் பாடிய புலவர் பெயர் மறைந்துவிடவே அவர் பாடிய பாட்டில் இருந்த சுவையுடைய சொல்வழக்கால் பெயரிட்டனர் என்று சொல்வதே சிறப்பாகும். கூகைக் கோழி என்ற பெயர் சங்க காலத்தில் பழகிய, வழங்கிய பெயராக இருந்திருக்கலாம். மலையாள மொழியில் இன்றும் பாமரமக்கள் ஒருவகை ஆந்தையைக் 'காலன்கோழி' என்று அழைக்கின்றனர். இப் பெயர் சங்ககாலப் பெயரான கூகைக்கோழி என்பதைப் போலவே உள்ளது. கூகைக்கோழி என்ற சொல்லைக் கூகையும் கோழியும் என்றும் கொள்ளலாமென்று உ. வே. சா. கூறியுள்ளார். ஆனால் முதுமரப் பொத்தில் காட்டுக் கோழியை இயற்கையில் காண முடியாது. காட்டுக் கோழிகள் பொத்தில் வாழ்வன அல்ல. 'காலன் கோழி' என்ற மலையாளப் பெயரில் காலன் என்ற சொல் கூற்றுவன் என்ற பொருளில் வருகின்றது. காலன்கோழி என்ற ஆந்தை சாவைத் தரும்படி கூவும் என்ற நம்பிக்கை மலையாளத்தில் உள்ளது. இந்தக் காலன் கோழியே (Moued wood owl) கூகைக்கோழியாக இருக்கலாம். காட்டுக்கோழியைப் போலவே கூவும் வேறொரு வகை ஆந்தையும் உள்ளது. இந்த ஆந்தை காட்டுக் கோழி கூவுவதுபோலக் கூவும். இந்த வகை ஆந்தை காட்டுக்கோழி வாழும் சூழலில் இயற்கையில் காணப்படும். இதைப் பறவைநூலார் (Barrd Jungle Owlet) என்றழைப்பர். இந்த ஆந்தையையே பெரும்பாலும் கூகைக் கோழி என்று அதனுடைய குரலில் காணப்படும் ஒப்புமை நோக்கிச் சங்ககாலத்தில் அழைத்திருக்கலாம். இந்த ஆந்தையைத் தமிழில் சின்ன ஆந்தை யென்றும், தெலுங்கில் 'அடவிப் பகடிகண்டெ' என்றும் அழைப்பர். இந்தி மொழியில் காட்டு ஆந்தை என்ற பொருளில் பெயரிட்டு அழைக்கின்றனர். காட்டில் கோழிபோல் கூவுவதால் கூகைக் கோழி யென்றனர். மலையாளத்தில் கூற்றுவன் என்ற பொருளுடைய செகுத்தான் என்ற பெயரும் ஆந்தைக்கு வழங்குகின்றது. செகுத்து என்ற சொல் சங்கநூல்களில் சொல்வதைக் குறித்து வருவதைக் காணலாம். சுட்டுக்குவியெனக் கூகை செத்தோரைக் கூப்பிடுவதாகவும், சாவோரைக் கூப்பிடுவதாகவும் புறநானூறும் (புறம்

240) மணிமேகலையும் (சக்கரவாள. 75) கூறுவதைக் கவனிக்க வேண்டும். மலையாளத்தில் ஒருவகை ஆந்தை 'குத்திச்சூடு, குத்திச்சூடு' என்று கத்துவதாகக் கூறுவர். 'பொருடெரிந் திசைக்குங் கடுங்குரற் குடிஞை' என்று வரும் அகநானூற்றுப் பாடல் (19) வரிக்குக் காணப்படும் பழைய உரையில் 'பொரு டெரிதல் குடிஞை யோசைக்குள்ளது, குத்திப்புதை என்றதோர் பொருள் தோன்ற இசைக்கும்' என்று கூறப்பட்டுள்ள விளக்கத்தைக் கவனிக்க வேண்டும். 'குத்திச்சுடு, வெட்டிப் புதை' என்று இந்தக் கூகை கூறுவதாகத் தமிழ்நாட்டில் பாமரமக்கள் கூறுவர். குத்திச்சுடு என்பதே குத்திச்சூடு என்று மலையாளத்தில் வருகின்றது. இவ்வாறு இப் பறவை கூறுவ தாகக் கொண்டதால் சங்ககாலத்தில் கூகையையும் ஆந்தை வகைப் பறவைகளையும் இடுகாட்டிலும் சுடுகாட்டிலும் வாழ்வ தாகக் கூறினர். இதனாலேயே சாக்குருவி என்று கூகையைப் பாமர மக்கள் அழைப்பர். தெலுங்கு மொழியில் சாவுப்பிட்ட (சாவுப்பெட்டை) என்றழைக்கப்படுகின்றது.

கூகை யென்பது முதலில் ஒருதனிப்பட்ட ஆந்தையைக் குறித்து வழங்கிற்று. ஆனால் பிற்காலத்தில் பொதுப்பெயராகக் கையாளப்பட்டது. ஊமைக்கூகை (நீலகேசி, தரும. 3), குரால் கூகை (நற்றிணை 215) என்ற பெயர்களில் வெவ்வேறு ஆந்தை வகைகளான ஊமனையும் குராலையும் கூகை யென்று அழைத் திருப்பதைக் காணலாம். பார்ஜி, கோண்டா மொழிகளிலும் 'ஊமகுஞ்ஞி' என்று ஒருவகை ஆந்தை அழைக்கப்படுகின்றது. இப் பெயரில் சங்ககாலத்தில் ஒருவகைப் பேராந்தைக்கு வழங்கிய பெயரான குடிஞையைக் (அகம் 9, 19, 89, புறம் 170, 370) காணலாம். ஊமைக்குடிஞை என்ற பெயர் இரு பேராந்தைகளின் பெயர்களை இணைத்துக் கூறியதாகும். தமிழில் இரண்டையும் வெவ்வேருகக் கண்டு கூறினர். சங்கப் பெயரான குடிஞை தமிழில் இன்று வழக்கற்றுப்போயிடினும் வடநாட்டில் வழங்கும் திராவிட மொழிகளில் குஞ்ஞி', 'குஞி' என்று இதே பெயர் மாறி வழங்குவதைக் கவனிக்க வேண்டும். அதுபோன்றே கூகை என்ற பெயரும் வடநாட்டு மொழிகளான இந்தியிலும் குசராத்தியிலும் 'கூகூ, கூபா' என்று ஒருவகை ஆந்தையைக் குறித்து வழங்குவதைக் காணலாம். திராவிட மொழிகளிலிருந்து இப் பெயர் எடுத்துக்கொள்ளப்பட்டதாகக் கருதவேண்டும். கூகையை இந்தியில் 'குரையா', 'கரைல்' என்று அழைக்கின்றனர். இப் பெயர்கள் வேறு வடமொழி களில் வழங்கவில்லை. இந்தப் பெயர்கள் திராவிட மொழிகளி

லிருந்து எடுக்கப்பட்டனவாகும். குரால் என்பதே இவ்வாறு மாறியிருப்பதாகத் தெரிகின்றது.

புறநானூறு 393ஆம் பாடலில் கூமை என்ற சொல் ஆந்தையைக் குறிக்கின்றது.

> "பதிமுகப் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
> குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
> குடிமுறை பாடி யொய்யென வருந்தி
> அடனசை மறந்தவெங் குழிசி மலர்க்கும்" —புறம். 393

'குறுநெடுந் துணையொடு கூமை வீதல்' என்ற புறநானூற்று வரியில் கூமை என்ற ஆந்தை வீச்சென்று கத்துவதாகக் கூறப் பட்டுள்ளது. 'வீசு கோட்டாந்தையுச சேவலோடலமர' (79—வரி 2) என்று வரும் கல்லாட வரியில் ஆந்தையின் வீச்சைக் கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். காரைக்காலம்மையாரும் 'ஆந்தைவீச' என்று பாடியுள்ளார். ஆந்தை வீச்சென்று கத்துவதாக இன்றும் பாமர மக்கள் பேசுவர். கூமை என்பது மலையாள மொழியில் கூமன் என்று வடகேரளத்தில் அழைக்கப் படுகின்றது. ஊமன் என்ற பேராந்தை மீனைத் தின்று வாழ்வதால அதை மலையாளத்தில் 'மீன்கூமன்' என்றழைப்பர். கூமன், கூமத்தி என்ற பெயர்களால் ஆண், பெண் ஊமன்களை அழைப்பர் 'கூமன் ஒரு மூளு மூளினால் கூமத்தி இரண்டு மூள் மூளும்' என்று மலையாள மக்கள் கூறுவர். ஆந்தைகளில் ஆணும் பெண்ணும் வெவ்வேறு வகையாகக் கூவுவதை அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். துளு மொழியில் இதையே 'கும்மே' ([illegible]) என்று அழைக்கின்றனர். சங்ககாலத்தில் ஒரே ஒரு புறநானூற்றுப் பாட்டில் வழங்கிய கூமைப் பெயர் தமிழில் வீழ்ந்துபோயினும் மலையாளத்திலும், துளு மொழி யிலும் வழக்கிலிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

ஆண்டலை என்ற பெயரும் பட்டினப்பாலையிலும் திரு முருகாற்றுப்படையிலும் ஆந்தையைக் குறித்து வழங்குவதைக் காணலாம்.

> "[illegible]ழுதாற் கூகையோ டாண்டலை விளிப்பவும்"
> —பட்டினப்பாலை 258.

> "சா[illegible]வோர் பயி நங் கூகையின் குரலும்
> [illegible] பொருந்திய குராலின் குரலு
> [illegible]டலை சுற்றிய வாண்டலைக் குரலு"
> —மணிமேகலை, சக்கரவாள. வரி 75—77

(தொடரும்)

# அவையே போதும்; அவள் எதற்கு?

[கீ. இராமலிங்கனார், எம்.ஏ.]

என் நண்பர் ஒருவர் கண்கவரும் துணிகளைக் கண்டால் களிதுளும்புவார். ''நிறம் எவ்வளவு கவர்ச்சியாக இருக்கிறது! வண்ணம் என்றால் இதுவல்லவா வண்ணம்!'' என்று துள்ளுவார். வேறு பல நிறங்களையும் ஒரு நிறத்தையும் ஒப்பிட்டு, ''அவற்றைக்காட்டிலும் இது எத்துணை வனப்பாக இருக்கிறது!'' என்று ஒரு குதி குதிப்பார். துணியில் போட்டுள்ள கட்டங்கள், பூக்கள், கொடிகள் போன்ற அமைப்புகளைப் புகழ்வதில் அவர்கொள்ளும் ஆர்வத்தைப் பார்ப்பவர் எவரும் அவ்வார்வத்திலே பிணிப்புண்டு போவர்.

வண்ணத்தில் மட்டுமல்லாமல் அவரது மனம் நூலின் நுண்மையிலும் நெசவின் திறத்தில்கூட ஈடுபாடு கொள்ளும். இந்த நூல் 100 எண் நூல், 200 எண் நூல் என்றெல்லாம் நூலின் மெல்லிய தன்மையை மதிப்பிடுவார். நெசவைப் பற்றியும் அவர் நெஞ்சம் நெகிழ்ந்து, ''கைந்நெசவில் இதைக் காட்டிலும் சிறப்பாக எப்படி நெய்ய முடியும்! பாலாவிபோல் இருக்கிறதே! இது எந்திர நெசவு போன்றே இருக்கின்றதே!'' என்று இன்புறுவார். எந்திர நெசவைக் கண்டாலும் அவர் மனம் என்னென்னவோ வகையில் அதனைப் பாராட்டும். 'நெசவா இது!' என்பார்.

இங்ஙனம் ஆடைத் துணிகளின் அழகின் திறங்களைப் பல வகையாகச் சுவைத்து மகிழும் இவர், அணிகலங்களையும் அகங்குளிரப் போற்றிப் புகழும் இயல்புடையவர். ஆடைத் துணிகளுள் இவை பெண்களுக்குரியன, இவை ஆண்களுக் குரியன என்றும், இவற்றை அப்படியே உடுத்தலாம், இவற்றை இவ்வாறு தைத்து உடுத்தலாம் என்று பாகுபடுத்தி அறிவார்ந்த முறையில் சீர்தூக்கிச் சொல்வது போலவே அணிகலன்களுள்ளும் பாகுபடுத்தியும் சீர்தூக்கியும் சொல்லும் சுவைநல உணர்வு பூண்டவர்.

ஆடை அங்காடிகளையும், அணிகலக் கடைகளையும் இவர் கண்டுவிட்டால் அவற்றினுள்ளே புகுந்து ஆங்காங்கே நின்று அங்காந்த வண்ணம் அவை அடுக்கி வைத்துள்ள அழகு, வகைப்படுத்தியுள்ள வனப்பு இவற்றைக் கண்டு மெய்ம்மறந்து போவார். பெண்களுக்கான ஆடைகள் பகுதியிலும், அணி

கலன் அடுக்கிலும் இவர் கொள்ளும் ஈடுபாடு மிகப் பெரிது. இவரோடு வெளியே செல்லும்போது, இவ்வகை வணிக இடங்களில் இவருடன் நுழைந்து விட்டால், இவரது ஆடை அணிகலப் பித்தைக் கண்டு எவரும் வியப்பு அடைவதுடன் அலுத்தும் போவர்.

துணிகளேயும் நகைகளேயும் காணும்போது, இவர் கொள்ளும் இன்ப உணர்வைப் பலரும் போற்றுவர். உண்மையாகவே பெரிய பெரிய ஆடை நிறுவனங்களுக்குள்ளே எவர் சென்றுவிட்டாலும், இன்ப உணர்வு பெருமல் இரார். அப்படியே பேர்போன அணிகல அங்காடிகளுக்குள்ளே நுழைந்து விட்டாலும் இன்ப ஊற்று எழப்பெருமல் இரார். எனவே என் நண்பரின் ஆடை அணிகலச் சுவை நுண் நுகர்வு பொய்ம்மையானது அன்று. மெய்யாகவே அவர் இன்பம் நுகர்கிருர். அறிவார்ந்த வேறு எவரும் அங்ஙனமே நுகர்வர் என்பது திண்ணம். ஆடைகளிலும் அணிகலங்களிலும் அவ்வளவு இன்பம் இருக்கத்தான் செய்கிறது.

இவ் ஆடைகளும் அணிகலன்களும் தம் அளவிலே இன்பம் அளிப்பனவாக இருந்தாலும், அவை மக்கள் அணிவதற்காகவே செய்யப்பெற்றன என்பதை அறிவுடைய எவரும் மறந்துவிடமாட்டார். என் நண்பருக்கு மட்டும் இந்த நினேவே வருவதில்லே. ஆடை அணிகலன்களேத் தனித்தனியாகக் காணும்போது ஒருவர் பெறும் இன்பத்தைக் காட்டிலும், அக் கடைகளிலேயே ஒரு மரக்கட்டை பொம்மைமீது போட்டு வைத்திருப்பதைப் பார்க்கும்போது ஒருவர் அடையும் இன்பம் பெரிது என்பதைக்கூட என் நண்பர் ஒப்புக்கொள்ளார். ஒரு பெண் உருவத்திற்கோ ஆண் வடிவத்திற்கோ தாம் விற்கும் ஆடை அணிகலன்களே அணிவித்து வைப்பதால் காண்பவர் உள்ளம் கவரப்பெற்று அவ் ஆடை அணிகலன் விரைந்து விலேபோகின்றன என்னும் உண்மையைக் கடைக்காரர் உணர்ந்துள்ள அளவுக்குக்கூட என் நண்பர் உணரவில்லே.

ஒரு பெண் மேனி நிறத்தில் எவ்வளவு குறைந்தவளாயும் உறுப்பின் அமைப்பில் எத்துணே அழகற்றவளாயும் இருந்தாலும் அவள் அணிவதால் ஆடை அணிகள் சிறப்படைகின்றன. வனப்பில் வளம் உடையவளாயும் வண்ணத்தில் கண்ணே ஈர்ப்பவளாயும் உள்ள ஒருத்தியின்மீது இவ் ஆடை அணிகலன்கள் பொருந்தும்போதுதான் அவற்றிற்குத் தனிப் பெருமை ஏற்படுகின்றது. அழகின் திருவுருவமாய்க் கருத்து

ஒருமித்த காதல் உடையவளாய், உவப்பூட்டும் உரைகளால் உணர்வு பெருகும் மொழியினளாய் உள்ள தம் மனைவி இந் நகை துணிகளால் தம்மை ஒப்பனை செய்துகொள்ளும் போது தான் அவற்றுக்கு ஒப்பற்ற ஒரு தனி மேன்மை உண்டாகின்றது என்னும் உண்மையை என் நண்பர் ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறார்.

தம் வாழ்வரசியின் மேனிநலங்களையும் மனமாண்பினையும், பண்புப் பாங்கினையும் உயர்ந்த வகையில் நுகர்வதற்காகவே ஆடைகளும் அணிகலன்களும் உறுதுணையாக இருக்கின்றன. அதுபோலவே பாட்டின் கருத்து நலங்களை நுகர்வதற்காகவே இசைகள் ஆக்கப்பெற்றுள்ளன. பாட்டில்லாமல் பண்ணும் இசையும் எதற்கு என்பதையும், அவள் இல்லாமல் நகையும் துணியும் எதற்கு என்பதையும், என் நண்பர் அடியோடு மறந்துவிடுகிறார்.

அவரது உள்ளத்தின் உயர்வற்ற தன்மையை என் என்பது? பண்களே இராகங்கள், இசையே போதுமே, பாட்டு எதற்கு? பாட்டமைந்த மொழி யெதற்கு என்று வறண்ட உணர்வால் வாய் கூசாமல் கூறுவார் போலவே என் நண்பர் இன்னமும் கூறிவருகிறார். "அவையே போதுமே! அவள் எதற்கு?" என்று.

---

## வழிபாடுகள் தமிழிலேயே நடைபெற வேண்டும்

தேவார திருவாசகங்களாற் பாடப் பெற்ற கோயில்களே பாராட்டப்படுகின்றன அல்லாமல் வடமொழி மந்திரங் களுக்காக எந்தக் கோயிலும் பாராட்டப் படவில்லை. ஆதலால் வழிபாடு முழுதும் தேவார திருவாசகமாகத் தமிழ் மந்திரங்களைக் கொண்டே நடைபெறுமாறு ஒவ்வொரு கோயிலிலும் ஏற்பாடு செய்தல் வேண்டும்.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை, பக். 196)

# மருந்துப்பெயர் இலக்கியங்கள்

[புலவர் பொ. முனியப்பன்]

**நுழைவிடம்**

உலகில் ஏறத்தாழ மூவாயிரம் மொழிகள் உள்ளன. இவற்றில், இலக்கியங்களைப் பெற்ற மொழிகள் மிகச் சிலவே. இச் சிலவற்றுள்ளும் இயற்கைநெறி திறம்பாது, பொய்-புனைசுருட்டுகளைப் போற்றாது உலக மக்களை நோக்கி உயர் கருத்துகளைப் படைத்த இலக்கியங்களைக் கொண்டது தமிழ் மொழி. கழக இலக்கியங்களே இவற்றிற்குச் சிறந்த காட்டாகும். வடமொழி உறவால் தமிழ் பெற்றதெல்லாம் இவற்றிற்கு முற்றிலும் மாறுபட்டதே. இலக்கியப் படைப்பில் மட்டுமின்றி, இலக்கியத்திற்குச் சூட்டிய பெயரிலும் தமிழ்மொழி ஒரு புதுமையை—அதன்வழி விளையும் பொன்றாச் சிறப்பை உணர்த்தியுள்ளது. அதனை, இங்கு அறிந்து ஆய்வு செய்வோம்.

**பெயரின் பெருமை**

பெயர் சூட்டுவதற்கு ஒரு விழாவே நடத்தும் பெருமைக்குரிய மரபைப் பெற்ற தமிழர்கள் நாம். என்றாலும், இன்று இத்தகைய உணர்வோடு அறிவமைந்த உயர் விழாக்கள் பெரிதும் அருகி வருகின்றன. பெயர் வைப்பதில் தம் உணர்வையும், அறிவையும், உயர்வையும் கடைப்பிடித்த அக்கால அருமைநிலை இக்கால் சிறுமையுற்றதால்தான், 'பெயரில் என்ன உள்ளதென்று?' சில பேதைகள் பிதற்றித் திரிகின்றனர். இத்தகைய பேதைகள் இங்கு மலிந்துவிட்டதால்தான் தமிழ்நாடு தன் பெயரைப் பெறுவதற்குக் கூடப் போராட வேண்டியிருந்தது.

வாழ்வில் பெயரின் பெருமையை உணராததால்தான் இன்று பல மக்களும், நூல்களும், மற்றும் திரைப்படம் போன்ற பிறவும் பெறும் பெயர்களெல்லாம் பொருந்தாப் பெயர்களாய்ப் புன்மையுற்று இழிந்து போகின்றன. இப் புன்மைக்கு இடமில்லாது தமிழ் இலக்கியங்கள் பெற்றுள்ள பெயர்களில் மூன்று மருந்துப் பெயர் இலக்கியங்களையும் அவற்றின்வழி பொலியும் பொன்றாக் கருத்துகளையும் காண்போம்.

**உடலும் உள்ளமும்**

எக்காலத்திற்கும் உதவும் ஏற்றமிக்கது நூலும் மருந்தும். உள்ளப் பிணிக்கு நூல். உடற் பிணிக்கு மருந்து. எனினும்

இவை தனித்தனியாய் இயங்க முடியாது. உள்ளப் பிணி நீங்க உடலும் ஒத்துழைக்க வேண்டும். உடற் பிணி நீங்க உள்ளமும் ஒத்துழைக்க வேண்டும். இவற்றின் இத்தகைய அரிய பிணைப்பைக் கண்டுதான் நம் முன்னோர்கள் மருந்துப் பெயரை இலக்கியத்திற்கு இட்டுள்ளார்கள்.

### மருந்துப் பெயரின் மாண்பு

மருந்தின் பெயரை இலக்கியத்தின் பெயராகப் பெற்றுள்ள அரியதன்மை உலக இலக்கியங்களிலேயே தமிழில் தான் என்று கருதுகின்றேன். (வேறு எம்மொழியிலேனும் இவ்வாறு மருந்துப் பெயர்பெற்ற இலக்கியங்கள் இருப்பின் அன்பர்கள் தெரிவிக்கவும்) பலதுறைகளிலும் பாங்கான வழி காட்டும் பைந்தமிழ், மருந்தும் இலக்கியமும் தம்முள் மயங்கி விளைவிக்கும் மாண்பயனைக் காட்டுவதில் வியப்பொன்றும் இல்லை. மருந்து என்பதன் முழுப்பொருளையும் உணர்ந்தாலன்றி, நாம் மருந்துப் பெயரை இலக்கியம் பெற்றதன் மாண்பினை உணர முடியாது. எனவே, அதனை இனிக் காண்போம்.

### மருந்தின் பெருமை

மருந்தெனில் எல்லாம் மருந்தாகா. அரும்பயனை விளைவிக்கும் பெருமை உடையதே மருந்தாகும். மரு – மணம். மணம் மிக்க தழைகளினின்றுமே மருந்து என்ற சொல் தோன்றியதென்பார் மொழியியற் பேரறிஞர் பாவாணர். மேலும், மெய்க்குரிய மணத்தைப் போக்கும் நோயை விரட்டி, மேலான மணத்தை மேனிக்குத் தருவதே மருந்தென்பர் மேலோர். இவ்வாறு அருமணமும் பெருமாண்புங் கொண்ட மருந்தின் சிறப்பை யெல்லாம் ஒரே பாடலில் திருமூலர் தெளிவாக மொழிந்துள்ளார். அஃதே,

"மறுப்பது உடல்நோய் மருந்தென லாகும்
மறுப்பது உளநோய் மருந்தென லாகும்
மறுப்பது இனிநோய் வாரா திருப்ப
மறுப்பது சாவை மருந்தென லாகும்."

இவ்வருமையான பாடல் திருமூலரின் 'எண்ணாயிரம்' என்னும் நூலில் உள்ளது. இது 'வந்த நோயை மறுத்து, உள்ளத்திற்குப் பேருக்கம் தந்து, வரும் நோயினையும் மறுத்து, இயல்பாக வந்து சேரும் சாவினையும் மறுத்து, நிலையான இன்பத்தை அருள்வதே மருந்து' என்று மருந்தின் மாண்பைச் சுருக்கி உரைக்கிறது. இதனை மேலும் விரிக்கின், அது தனிப் பெருங்

கட்டுரையாய் விரியுமாதலின் இப் பாடலை ஆழ்ந்து நோக்கி மருந்தின் பெருமைகளை அறிந்துகொள்க.

**முதல் தமிழ் நூல்கள் மூன்று**

உலக இலக்கியங்களிலேயே மருந்தின் பெயர் இலக்கியப் பெயராய் மதிப்புயர்ந்த நிலையை முதன்மையாகத் தமிழில்தான் காண்கிறோம். அத்தகைய மூன்று நூல்களாவன: திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி. இம் மாண்பினைப் பின்பற்றி மருந்துப் பெயர் கொண்ட இலக்கியங்களை இன்றுவரை எவரும் படைத்த தாகத் தெரியவில்லை. மருந்துப் பெயர் இலக்கியப் பெயராய் மதிப்புயர்ந்ததெனின், அதனை ஏன் மற்றவர்கள் பின்பற்ற வில்லை என்ற வினா எழுதல் இயல்பே. இதற்கு, அந்த நூல்களை நோக்கிய அளவிற்குக்கூட அதற்கு மருந்தின் பெயர் அமைந்த தன்மையை யாரும் ஆழ்ந்து நோக்கவில்லை என்பதே என் விடை. இனி அதனை நோக்குவோம்.

**முதன்மை பெற்ற மும்மருந்துகள்**

எத்துணையோ பேராற்றல் மிக்க மருந்துகள் எல்லாம் தமிழ் மருத்துவத்தில் இருக்க, மேற்குறிப்பிட்ட எளிய மருந்து களை ஏன் தங்கள் இலக்கியங்களுக்குச் சூட்டினர்? இம் மருந்து களில் அப் புலவர்கள் கண்ட மேன்மை என்ன? அதனை அறிந்தால்தானே அந்நூல்களின் சிறப்பையும் நாம் நன்கு உணர முடியும்?

மேற்குறிப்பிட்ட மூன்று மருந்துகளும் எங்கும் கிடைப் பவை. எளிதில் கிடைப்பவை. எவரும் இம் மருந்துகளை எளிதில் ஆக்கலாம். இம் மருந்துகளை உரிய அளவில் உண்ணாமல் மிகுத்தோ குறைத்தோ உண்டாலுங்கூட எத் தகைய தீங்கும் விளைவிக்காதவை. இவற்றை உண்பதற்காக நம் அன்றாட உணவு வகைகளிலோ, வினைப்பாகுபாடுகளிலோ நாம் எவ்வித விலக்கையும் (பத்தியத்தையும்) கடைப்பிடிக்க வேண்டியதில்லை. இவற்றைக் குறிப்பிட்ட நாள்வரை தொடர்ந்து உண்பது சிறப்பு. அவ்வாறு இல்லாமல் மறந்தோ, தவிர்க்க முடியாத ஏதுக்களாலோ இடையிடையே விட்டு விட்டாலுங்கூட நமக்கு எத்தகைய நலக்குறைவும் ஏற்படாது. உண்டவரை உள்ள பயனைக் கொடுக்கவும் தவறாது. இன்னும் இவைபோன்ற சிறப்புகள் பலவற்றை உடையவை இம் மருந்துகள்.

### வருமுன் காக்கும் வல்லமை

பொதுவாக மருந்துகள் என்றாலே வந்த பிணியைத் தீர்ப்பதற்குப் பயன்படுபவை (பிணிக்கு மருந்து - குறள் : 1102) என்பதை நாம் அறிவோம். ஆனால், இங்குக் கூறப்பட்டமும் மருந்துகளும் நோய் உள்ளோரும் இல்லோரும் உண்ணத் தகுந்தவை. பெரும்பாலான மருந்துகள் யாவும் வந்தபின் தீர்ப்பவையே. ஆனால், இவையோ வருமுன் காப்பவை. இவ்வாறு வருமுன் காக்கும் வல்லமையோடு ஏற்றமுள்ள சிறப்புகள் யாவற்றையும் பெற்றுள்ள இம் மருந்துகளின் பெயர்களை அம் மேன்மைத் தமிழ்ப் புலவர்கள் தாங்கள் படைத்த இலக்கியத்திற்கு இட்டதில் வியப்பில்லை யன்றோ!

### மருந்தும் நூலும்

நூலிற்கும் மருந்திற்கும் உள்ள நுட்ப இயல்புகளையும் எளிய மருந்தின் பெயரை இலக்கியப் பெயராய் ஆக்கிய ஏற்றத்தையும் இங்குக் காண்போம். பொதுவாக மருந்துகள் நோய்களுக்குத்தான் என்றாலும், இங்குக் கூறப்பட்ட மருந்துகள் மூன்றும் எல்லோருக்கும் நற்பயன் விளைவிக்கும் பாங்குடையன. இதுபோலவே நூலும் எல்லாருக்கும் நல்வாழ்வைக் கூட்டும் நயன்மை உடையதாய் இருத்தல் வேண்டும். மேலே, மும்மருந்துகளுக்குச் சொல்லப்பட்ட சிறப்புகள் எல்லாம் பொருந்தும் பெருமையுடன் நூல்கள் இலங்க வேண்டும்.

இவ்விடத்தில், வடமொழி 'வேத' நூல்களை ஒப்பு நோக்குவதும் எளிய மருந்துப் பெயர்களைத் தமிழ் இலக்கியங்கள் பெயராய்ப் பெற்றதன் சிறப்பை எடுத்துக் காட்டும். அஃதாவது, வடமொழி வேதங்கள் போன்ற நூல்களெல்லாம் மக்களுக்குத் தெரியாமல் மறைக்கப்பட்டவை. ஏனெனில், உழைக்காமலேயே உயர்நிலை வாழ்வு வாழ்ந்துவந்த தங்கள் வாழ்விற்கு ஊறுநேராதிருக்கவும், தம்மவர் அல்லாத பிறர் யாவரும் அறியாமைச் சேற்றிலேயே அழுந்திக் கிடக்க வேண்டுமென்ற அழுக்காற்றினாலுமே அவர்கள் அவ்வாறு செய்தனர்.

தமிழர்களின் கொள்கையோ இதற்கு முற்றிலும் மாறுபட்டது. எந்த நூலாயினுஞ் சரி, அது-மக்கள் யாவருக்கும் பயன்பட வேண்டுமென்பதே நம்மவரின் கோட்பாடு. அதனால் தான் எல்லாருக்கும் எளிதில் கிடைத்து நற்பயன் தரும் மருந்துபோல, தாங்கள் படைத்த இலக்கியமும் அவ்வாறு

நலம்தரும் என்பதை எடுத்துக் காட்டவே இப் பெயர்களைச் சூட்டியுள்ளனர்.

இவ்விடத்தில், தமிழில் சிறந்த நூல்களையும் நாம் 'மறை' என்று போற்றுவது பொருந்துமா என்னும் வினு எழலாம். இதற்குப் பொருந்தும் என்பதே விடையாகும். எவ்வாறெனில், வடமொழி வேதங்களெல்லாம் மக்களுக்குத் தெரியாமல் மறைக்கப்பட்ட கரணியத்தால் மறை என்று பெயர் பெற்றன. ஆனுல் தமிழ் மறைகளோ அந்த அடிப்படையில் பெயர் பெறுமல், மக்களுக்கு எளிதில் தெரியாதும்—புரியாதும் இருக்கும் நிறைவுதரும் மறைவான உண்மைகளை யாவரும் அறியுமாறு எடுத்துரைப்பதால்தான் மறையெனப் பெயர் பெற்றது. சான்றென்ன எனில்; தொல்காப்பியத்திலும், திருக்குறளிலும் மறை என்னும் சொல் காட்டும் பொருளையும், அஃது எடுத்தாளப்பட்டுள்ள இடத்தையும் நோக்கி அறிக. இனி, இம் மும்மருந்துகளை ஆக்குவதையும், உண்பதையும், இவை தரும் அரும் பயன்களையும் காண்போம்.

## திரிகடுகம்

**மருந்தாக்கம் :**

சுக்கு, மிளகு, திப்பிலி என்ற மூன்று பொருளால் ஆக்கப் படுவது இம் மருந்து. சுக்கைப் பயன்படுத்துவதற்குமுன் அதன் தொலிபை நீக்கிக்கொள்ளவேண்டும். (சுக்கை எதற்குப் பயன் படுத்திஞலும் தொலி நீக்கியே பயன்படுத்த வேண்டும். ஏனெனில், அத் தொலியில் நஞ்சுத் தன்மை உள்ளது) இம் மூன்றையும் நன்ருக இடித்துத் தூள்செய்து, அதனை மெல்லிய துணியில் தேய்த்து வடிகட்டி ஒவ்வொன்றிலும் சமஅளவு எடுத்து ஒன்ருகக் கலந்து வைத்துக் கொண்டால், இதுவே முக்கடுகம் என்னும் திரிகடுக மருந்தாகும்.

**உண்ணும் முறை :**

இம் மருந்தை வலிமை வாய்ந்த உடல் உடையவர்களும், கடும் உழைப்பை மேற்கொள்பவர்களும் காலை, நடுப்பகல், மாலை என்ற மூன்று வேளை உண்ணலாம். மற்றவர்கள் காலை, மாலை என்ற இருவேளை உண்ணலாம். எவ்வாறு இதனை உண்ண வேண்டுமெனில் அவரவர்களின் பெருவிரல், ஆட்காட்டிவிரல், நடுவிரல் ஆகிய மூன்றையுஞ் சேர்த்து: இத் தூளை அள்ளிஞல் எவ்வளவு கொள்ளுமோ அந்த அளவை வாயிற் போட்டுக் தூயநீரைக் குடித்தல் வேண்டும். இந்த அளவிற்கே முக்கடி அல்லது திரிகடி என்று பெயர்.

(தொடரும்)

# ச ரி க ம ப த நி—குறியீட்டு விளக்கம்

[பேராசிரியர் வீ. ப. கா. சொல்லழகன்

இறையியல் கல்லூரி, மதுரை]

தமிழ்நாட்டில், மிகப் பண்டைக் காலந்தொட்டுக் கோவைகளை (சுவரங்களை) அடுக்கித் தாளத்தினுள் அமைத்துப் பாடும் விரிவான முறை இருந்துவருவது — தென்னாட்டுத் தமிழிசையின் தனிப்பெருஞ் சிறப்புகளுள் ஒன்றாகும். வட இந்தியாவிலும் கோவை அடுக்கு, பாடும் முறை இருப்பினும், தென்னகத்தில்தான், உலக இசையில்—மிகச் சிறப்பாக விரிவாகக் கோவை அடுக்கு—பாடும் முறை வளர்ந்தோங்கி யுள்ளது. இது, சிலப்பதிகாரக் காலத்திற்குச் சற்றுமுன்னர்த் தோன்றிப் படிப்படியாக வளர்ந்தோங்கி வந்து இன்று நல்ல இலக்கணங்களோடு விளங்குகிறது.

கோவை பாடும் முறைக்கு—ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஔ எனும் ஏழு நெடில் எழுத்துகளைப் பயன்படுத்தலாம் எனச் சிலர் ஆய்ந்து கூறியும் பாடிக்காட்டியும் வருகின்றனர்; இது பொருந்தாதது. ஏனெனில் ஏழு எழுத்துகளும் உயிர் எழுத்து களே. உயிர் எழுத்துகளை—மூன்றும்கால விரைவு நடையில் பாடுதல் இயலாது; ஓசையும் பிறக்காது; இது சிறக்காது. எனவே, உயிர்மெய் எழுத்துகளே—கோவை (=சுவரம்) பாடு தற்கு உரியன என்பதை நடைமுறை இசை பயின்றவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள். இனிக் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனும் ஏழ் சொல்லின் முதல் எழுத்து களாகிய கு, து, கை, உ, இ, வி, தா—இவற்றைக் கோவைபாடப் பயன்படுத்தலாமா ?—எனும் வினா எழும்புகிறது. இவற்றிலும் 'உ, இ'—எனும் இரு எழுத்தும் உயிர் எழுத்துகள் ஆதலால் இவை இன்னோசை பயவா; விரைந்துபாட இயலா.

தென்னகம் முழுவதிலும், வடஇந்தியா முழுவதிலும் — ச, ரி, க, ம, ப, த, நி எனும் எழுத்துகளைக் கொண்டே, கோவை பாடும் முறை இருந்து வருவதால்—ஒருமைப்பாடு கருதி—அக் குறியீட்டு எழுத்துகளையே தமிழர்களும் கொள்ளலாம் என்று சிந்திக்கின்றேன். மொழிநூல் ஞாயிறு, தேவநேயரும் பண்ணாய்வின் அண்ணல் சுந்தரேசரும் இவ் விளக்கம்பற்றி என்ன எண்ணுவார்களோ ? கருத்தறிவிக்க வணங்கி வேண்டுகின்றேன்.

1, 2, 3 எனும் அரேபிய நாட்டுக் குறியீடுகளையும், (+) (÷) (—) (=) முதலிய கணிதக் குறியீடுகளையும் நாம் ஏற்று வழங்கி வருவது போன்றே—ச, ரி, க, ம, ப, த, நி எனும் குறியீட்டு எழுத்துகளையும் வழங்கி வரலாம்; தமிழ்க்கோவைக் குரிய சொற்களைப் பெரிதும் இசையியலில் வழங்கி இசைச் செய்திகளை விளக்கலாம்.

இனிக், குறியீட்டு எழுத்துகள் குறிக்கும் பொருள் என்ன எனக் காண்போம். 'ஸ' வேறு; 'ச' வேறு.

சா—எனும் எழுத்து ஏழு கோவைகளும் பிறக்கச் சார்பாக அடிப்படையாக இருப்பதால் — சார்புணர்ந்து—பிற கோவை களைப் படிப்படியாக உயர்த்தி அமைப்பதால்—சார்புகருதி—'சா' எனும் குறியிடலாம். சா—ஏழு கோவைகள் பிறக்கச் சார்பான முதற்கோவை.

ரீ—ரீங்காரம் சுட்டுவது; வண்டுகள் இருகோவைக்குள் பெரும்பாலும் ஒலிப்பன. மெல்லிய இறகுகளை வண்டுகள் அசைப்பதால்—ரீ எனும் இரண்டாம் ஒலிமம் எழும். வண்டு களின் ரீங்கார ஒலியைத் தமிழ் இலக்கியம் மிகச் சுவைத்துப் போற்றக் காணலாம்.

> "மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்று இறை அடியின் இன்னிழலுக்கு உவமை—வண்டுகளின் மூசு ஒலியைச் சுட்டுவதால்—வண்டின் "ரீங்காரம்" எவ்வளவு போற்றப்படுகிறது என அறியலாகும்.

கா—கைக்கிளை ஆகிய கோவையைக் "கை"—எனும் எழுத்துக்குப் பதிலாகக் "கா" எனும் எழுத்தைப் பயன் படுத்தலாம்.

ம—இது சார்பாகிய 'சா' எனும் கோவையுடன் மருவும் நட்புக் கோவையாகும் ; மருவுதல் - பொருந்துதல்—இயைதல் எனவே—'சா' எனும் கோவையுடன் பொருந்தி, இயைந்து மருவும் கோவையே 'ம' எனும் கோவையாகும்.

ப—பட்டடையாக ஒத்திசைக்கும் கோவை. இணைக் கோவை 'ப' எனும் கோவை. பட்டடை என்பது குரல் கோவை ஒலிக்குள்பட்டு இணைந்து அடைந்து கொள்வதால் பட்டடைக் கோவை எனப் பெயர் பெற்றது. "ஏழாம்

நரம்பிணே''—என்பது கல்லாடம். இதுவே 'இளி'—என்னும் நரம்பு. இந்த நரம்பு அல்லது கோவைக்குச் சிலப்பதிகார உரையாசிரியர் 'பட்டடை' என்று மற்றுமொரு பெயர் சூட்டு கின்ருர். பட்டு அடைதல் என்பது ஒன்றுபட்டுச் சேர்ந்து கொள்ளுதல் எனப் பொருள்படும். ''ச-ப''—இரண்டும் ஒன்று பட்டும் ஒலிக்கும்; எனவே 'ப' எனும் குறியீட்டு எழுத்து—பட்டடை எனும் இளி நரம்பைச் சுட்டுவது.

த—தண்மை மிக்க கோவை. விளரி எனும் கோவையே 'த'. விளர்=மென்மை; விளரி=மென்மை ஒலிக்கோவை. இரக்கமாக உருக்கமாக ஒலித்தற்குரிய நெய்தற்பண்ணுக்கு விளரிப் பண் எனும் பெயர் இங்கு ஒத்து நோக்கற்குரியது. எனவே 'த' எனும் எழுத்துச்சுட்டு தண்மைமிக்க கோவையைக் குறிக்கும்.

நி—இதுதான் மற்றைய கோவைகளைவிட, மிக உச்சமான ஒலியுடைய கோவை; நிவந்து ஓங்கி ஒலிப்பது—'நி'; ''உச்ச இசையின் பெயரே தாரம்''—என்பது. வீரமாமுனிவரின் அகராதியில் பண்டையச் செய்யுள்வரியாகக் காட்டப்படுவது. ''தாரமும் உச்சமும் வல்லிசை யாகும்'' என்பது பிங்கலம். தார்=நீண்டு உயர்ந்தது, நிவந்து ஓங்கியது. நிவப்பே தாரம் எனலாம். எனவே 'நி' என்பது—நிவந்து ஓங்கிய கோவைச் சுட்டுவது எனக் கொள்ளலாம்.

இங்குக் கூறிய விளக்கம் யாவும் குரல், துத்தம், கைக்கிளை உழை, இளி, விளரி, தாரம் என்னும் சொல்கள் என்ன பொருள் குறித்துள்ளனவோ—அப் பொருளின் அடியாகவே விளக்கப்பட்டன. மேலும் விளக்கம் விரும்புவோர் தாமரைச் செல்வர். வ. சுப்பையா பிள்ளை அவர்களின் பவள விழாமலர் 135ஆம் பக்கம் கண்டுகொள்ளலாம்.

சமசுகிருத ஒலிகளில் ச, ரி, க, ம, ப, த, நி முதலிய எழுத்துகளை ஒலிக்காமல் தமிழ் ஒலிகளாகவே ஒலித்தல் இனிமையாகும். சமசுகிருதக் குறியீட்டு விளக்கம் வேறு. இங்குக் குறியீட்டு விளக்கம்—பண்டையக் கோவைச் சொல்லடி யாக அமைந்தவை. குறியீடுகளை வைத்துக்கொள்ள அவ்வ வர்க்கு உரிமைகள் உண்டு. மறுத்தற்கும் வெறுத்தற்கும் இத்தகு குறியீட்டு விளக்கத்தில் இடமில்லை.

வாழிய வண்டமிழ் இசை.

———

# வண்ணச்சரபம் தண்டபாணியடிகள் முருகப் பெருமானிடம் முறைகூறி முத்தம் வேண்டல்

[தி. செ. முருகதாச அடிகள்]

உலகில் பல தொழில்களிருக்கின்றன. அத் தொழில்களை நடத்துபவர்கள் தொழிலின் இயல்பையும், உயர்வையும் அறிந்திருந்தால்தான், பிறருக்கும் அதைச் செய்ய முற்படுவார். அதுபோல, முத்தம் பலரிடம் பெற்றவன் தான், பிறருக்கும் முத்தம் தர இசைவான். முருகப்பெருமான் பலரிடம் முத்தம் பெற்றிருப்பவன். ஆதலின் முத்தம் தா என்று புலவர்கள் முருகனைப் பிள்ளைத்தமிழ் பாடும்போது வேண்டுகிறார்கள். அப்படி எவரெவரிடம் முத்தம் பெற்றுள்ளான் முருகன் என்பதையே இதன்மூலம் அறியவுள்ளோம்.

முதலாமவர் தந்தையாரான சிவபிரான். அவரெப்படிப் பட்டவரெனில், ஆடுகின்றவர். எங்கே ஆடுகின்றார் என்றால், '**எப்பொழுதும்**', எங்கே ஆடுகின்றார்? அம்பலத்தில்—அம்பலமென்பது சபை (பொதுவிடம்). அவர் இருப்பதும் அம்பலமே. ஆனால் அவர் உண்பது இரந்து (யாசித்து) என்பதாம். அவர் ஒருவர் ஆடுவதால் உலகத்திலெல்லாம் ஆடுகின்றன. அவரொருவரது ஆட்டமில்லையானால், உலகில் உயிரோட்டமில்லை, நமக்கு உலகில் வேலையில்லை. மக்கள் யாவரும் ஒன்று கூடிவிடுவார்கள். அவரது ஆட்டம் உண்டா இல்லையா என்பதை எப்படி யறிகிறோம்? நெஞ்சின் இடப்புறம் தொட்டுப் பார்த்தறிகின்றார்கள். உயிர்த்துடிப்புதான் அவரது ஆட்டம். உலகத்திலெல்லாமும் அப்படியே. சூரியசந்திரர், உடுக்கள் மற்றும் பல அண்டங்கள் வானவெளியிலே இயங்கிக்கொண்டேயிருக்கின்றன வென்றால், ஒருவரது ஆட்டமேயாமென்பர் ஆன்றோர். எனவேதான் '**எப்பொழுதும் அம்பலத்து ஆடிக்— கபாலந்து இரந்து உண்ட தந்தையார்**' என்றார். இரத்தல் என்றால் என்ன? உயிர்களின் அகந்தையைத் தான்பெற்று, உயிர்களை இன்பவெள்ளத்தில் மூழ்குவிக்கின்றான். **கபாலம்** என்பது மண்டை ஓடு. ஏன்? தங்கமன்றில் ஆடுபவனுக்கு, உணவுக்கு வழியில்லையா? நல்லதாக ஒரு கொள்கலமில்லையா? தானென்று அகந்தை கொண்ட பிரமன் தலையொன்றைக் கிள்ளியெடுத்தான். அகந்தை தொலைந்தது. அதுபோல மற்றையரது அகந்தையையே பிச்சையாகப் பெறுகின்றான் என்பதாம்.

தந்தைதான் அப்படியென்ருல், தாய் எவ்வாறெனில், அவள் இடைச்சியாம். இழையென்ற நூல்போன்று மெல்லிய இடையை யுடையவள் இடைச்சி. அவள் ஒரு பேதை. பேதை யென்ருல் என்ன அறிவற்றவள் என்பதா? இல்லேயில்லே. பேதை என்பது ஏழுவயதளவில் உள்ள பருவம் பேதை யென்பதாம். அது கணவனுடன் வாழும் அறிவுவராத பருவம் என்ற பொருளினது. அவள் கன்னியாயிருந்து உலகமெல்லா மீன்றவள், இளமை மாருதவள் என்றெல்லாம் கூறுவர். தென் கடந்கரையில் கன்னியாயிருந்து வருகிருளென்பது வெளிப்படை. கவிராச பண்டிதர் சௌந்தரியலகரியை, வட மொழியிலிருந்து தமிழிற் பாடியதற்காக இறைவனுணேப்படி, அவர் மகள் வடிவில் ஆறுமாதமட்டும், அவர் காசி சென்று திரும்பி வரும்வரை உணவு படைத்தாளென்பதும் ஒன்று. இதை "இழையெனத் தகுசிற்றிடைப் பேதையென்று உருவெடுத்துற்ற அன்னேயாரும்" என்று கூறினர்.

அண்ணனெருவனுண்டு, அவரெப்படி யென்பதை அறிவோம். சூரியனேத் தன் வயிற்றில் அமையக்கொண் டுள்ளார். சூரியன் உலகத்துக்கெல்லாம் ஒளிகாட்டி ஒவ்வொரு நாளேயும் மக்கள்முதல் எல்லா வுயிர்களேயும் உலகில் வாழச் செய்தும், இரவை உண்டாக்கி ஓய்வுபெறச் செய்தும், தினத்தை உண்டாக்கித் "தினகரன்" என்ற பெயர் பெற்றும் விளங்கு பவன். காலே, உச்சி, மாலே யென்றுள்ள மூன்று காலத்தைக் காட்டுபவன். அவனே வயிற்றிற் கொண்டு, யானேமுகமுடைய வராயிருக்கின்ருர். சூரியனே வயிற்றிற் கொண்ட காரணமென் னெனில், நாரதர் கொண்டுவந்த மாங்கனி யொன்றை முழுமை யாகப் பெறும்படி இறைவன் விதித்த கட்டளேக்கிணங்க, முருகன் உலகைச் சுற்றிவர மயிலேறிச் சென்ருன். கணபதி, எல்லா வுலகமும் ஆனுய் நீயே என்ற தத்துவ முணர்ந்தவராதலால், தந்தை தாயரையே சுற்றிவந்து, பழத்தை முதலிற் பெற்ருர். அதனுல் சிரமப்பட்டுச் சுற்றிவந்தும் தனக்குக் கிடைக்கவில்லே. தந்திரமாகத் தந்தையைச் சுற்றிவந்து பழம் பெற்றுனே அண்ணன் என்று வேலால் வயிற்றிற் குத்திவிட்டார். அதற்கு ஒட்டுப் போட்டார் சூரியனே. ஆதிசேடனுன நாகத்தைக் கயிருகக் கட்டுப்போட்டார் என்பது ஒரு வரலாறு. எனவேதான் கணபதி வயிற்றில் நாகக்கச்சிருப்பது காணலாம். சூரியன் வயிற்றிலிருப்பதை, கச்சியப்பர் கந்தபுராணநூற் காப்பிற் கூறியுள்ளார்.

திகடசக்கரச் செம்முகம் ஐந்துளான்—சகடசக்கரத் தாமரை நாயகன் என்று சூரியனேக் கூப்பிட்டார். விளக்கமான பத்துத்

திருக்கரங்களையும், திருமுகம் ஐந்தையும் கொண்ட சிவபிரானது தேருக்குச் சக்கரமாயிருப்பது சந்திரனோடு சூரியனும். அவன் தாமரை மலரைச் சொந்தமாயுடையவனென்றார். அத்தகைய சூரியனை, அகடுஅசக்கு அரவின் மணியாவுறைபவன். வயிற்றில் ஒளிவிடும் நாக இரத்தினம்போலக் 'கொண்டுள்ள பெருமான் என்றார். அகடு - வயிறு. அசக்கு - கட்டுதற்கு உரியது. **''மெய்ப்பொழுது காட்டும் ஒரு சுடர் உற்ற வயிறு இலகும் வேழமுக அண்ணலும்''** என்றார்.

முருகனுக்கு மாமனார் ஒருவர். அவரோவென்றால், வினோதப் பிறவி. கடலில் மீனாகவும், ஆமையாகவுமிருந்து, காத்த திருவிளையாடலுடையவர். தேவர்கள் திருப்பாற் கடலில் மந்தரமலையை மத்தாக நட்டு, வாசுகியென்ற நாகத்தைக் கயிருக்கி, அமுதம் கடையலானார்கள். மலை நிலை கொள்ளா திருந்தது. ஆமையுருக்கொண்டு கீழே தாங்கினார் திருமால். கமடம் - ஆமை. இதைக் கூர்மாவதாரமென்பர். நான்கு வேதங்களையும் கொண்டு அசுரன் கடலுள் மறைந்தபோது, மீனுருக்கொண்டு சென்று, மீட்டுக்கொண்டு வந்தனர் திருமால். இதை மச்சாவதாரமென்பர். மச்சம் - மீன். எனவே, **'வேலையிற் கமடமோடு மீனாகியும் சிறிது விளையாடும் மாமனார்''** என்றனர்.

இதுமட்டுமா? மாமியார் ஒருத்தி. அந்த அம்மையாருக்கு நிலையான வாழ்வு கிடையாது. திடீரென்று வருவாள். அதுபோலவே மறைவாள். அதுவுமன்றி, எவரிடம் வாழ வேண்டும், எவரிடம் கூடாதென்பதும் கிடையாது. அசத்திய முதலான தீய நடையினரிடம் செல்வாக்கைத் தந்து இறுமாப்பைத் தருவாள். சத்தியசீலமுடையவரை ஊண் உடையுமின்றித் தவிக்கவைத்து வேடிக்கை பார்ப்பவளும்கூட. இப்படி ஒரு மாமியார் முருகப்பெருமானுக்கு. இந்த அம்மையாரது நிலையற்றதன்மை புலவருக்கு வியப்பையூட்டிற்றுப் போலும். **''இப்பொழுது வரல், போதல், என்னும் ஒரு நிலையற்றிலங்கு திருமாமியாரும்''** என்றார். 'எவரிடம் வரல், எவரிடம் போதல்' என்பதை உள்ளுறையாக வுணரவைத்தார் புலவர்.

இனி, இரண்டு மனைவியருடன் வாழ்பவர். இதுவரை கூறிய, தந்தை, தாய், தமையன் பாசத்தால் முத்தமிட்டனர். மனைவியர் அன்பினால் முத்தமிட்டனர். மாமியார் முத்தமிட்டது எப்படியென்று ஐயமெழலாமல்லவா? இந்த மாமியார் அன்னியப்பட்ட அல்லது பெண் கொடுத்த மாமியாரல்லவே? தம் கணவரான திருமாலின் தங்கை மைந்தன். தமக்குத்

தமையனான சிவன் மகன். எனவே உரிமை காரணமாக முத்தமிடத் தகுதியுள்ளவரெனக் கொள்க. திருமாலின் தங்கை உமையவள். அவள் சிவன் சத்தியென்பது பலருமறிவர். சிவனுடைய தங்கை திருமகள் என்று இதுவரை எவராவது கூறியதுண்டா? இஃது ஒரு புரட்சியல்லவா என்று கருத இடமுண்டு. திருமாலின் தங்கை உமையவள் என்பதுபோல. திருமாலின் மனைவி, சிவன் தங்கை முறைதானே. உலகவழக்கு அப்படித்தானே! **''நிலவார் சடைப்பெருமான் தங்கையாய்ப், பெருநீலவண்ணன், கலவாமகிழ்மனையாய் அவன் மார்பிற்கவின்ற பொன்னே'** என்பது திருமகளந்தாதி. இவர்களெல்லாம் முத்தமிட்டு மகிழப் பெற்றவன் முருகன்.

கிளியொன்றிருக்கிறது முருகனிடம். அது, சந்தக்கவி முதலான அரிய தமிழ்ப் பாடல்களைப் பாடுவது. அதுவும் முத்தமிடுவது. முத்தமிடப் பெறுவது.

இவ்வாறு உள்ளவற்றுடன், தன் உள்ளமும் அறிய மனவெளியில் முத்தம் கொடுத்தானும். இதைப் புலவர், **''எனதுள்ளமும் இயம்பரிய உவகைகொண்டு, முப்பொழுதும் முத்தமிடும் முருகையனே''** என்று அழைத்து, நனவில் காட்சியுதவி முத்தம் கொடு என்று கேட்கின்றார். பாட்டு முழுமையும் பார்க்கலாம். படிக்கலாம்.

''எப்பொழுதும் அம்பலத்(து) ஆடிக்க பாலத்(து)
இரந்துண்ட தந்தையாரும்
இழையெனத் தகுசிற் றிடைப்பேதை யென்றுரு
எடுத்துற்ற அன்னையாரும்
மெய்ப்பொழுது காட்டும்ஒரு சுடருற்ற வயிறிலகும்
வேழமுக அண்ணனாரும்
வேலையிற் கமடமொடு மீனாகி யும்சிறிது
விளையாடும் மாமனாரும்
இப்பொழுது வரல்போதல் என்னுமொரு விலையற்(று)
இலங்குதிரு மாமியாரும்
இருமனைவி மாரும்,ஒரு கிளியும்,என துள்ளமும்
இயம்பரிய உவகைகொண்டு
முப்பொழுதும் முத்தமிடும் முருகைய னேஉனது
முத்தம்கொடுத் தருள்வையே
முதிர்புகழ்ச் சென்னையிற் குடிகொண்ட கந்தனே
முத்தம்கொடுத் தருள்வையே.''

இவ்வாறு பாடிய புலவர் யாரென்று தெரிய எண்ணமேற்படுகின்றதல்லவா ? அவர் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி

சுவாமிகள்தாம். அவர் சென்னைக்குரிய சிறப்பான கடவுள் கந்தப்பெருமான். அப் பெருமான்மீது பாடியுள்ள பிள்ளைத் தமிழில் முத்தப்பருவத்தில் உள்ள கவி. இதுபோன்று, கலம்பகமொன்றுண்டு. அதற்குப் பொருளும் வரையப்பட்டுள்ளது. அரியநடை, கருத்துள்ள நூல், வெண்பா மாலை, திருப்புகழ்ப் பதிகம் மற்றும் பல பதிகங்கள் கந்தசாமிக்குப் பாடியுள்ளனர். அவை யாவும் ஒருசேரத் திரட்டிப் பதித்து வெளியிட்டால், கந்தப்பெருமான் அன்புள்ளவர்கட்குப் பேருதவி யாகும். அன்பும் பொருளுமுள்ளவர் முன்வரவேண்டும். பாடல்கள் இல்லாதவூர்கள் பல. அவ்வூர் மக்கள் பொதுவான பல பாடல்களைப் படிக்கலாம். பாடல் உள்ள வூர் மக்கள், அவ்வவ்வூர்ப் பாக்களைப் பாடித் துதிப்பதில் ஒரு சிறப்பும், மகிழ்ச்சியும், மதிப்பும் உண்டு. அத்தகைய நல்ல வாய்ப்பினைச் சென்னை மக்கள்பெற, முருகப்பெருமான் திருவருள் துணை புரிவதாக.

---

## அடிகளார் தமிழ் வணக்கப் பாடல்கள்

எந்த வேளையும் நின்சுவை கருதிடும் யானும்
பந்த வேதனைப் படுவது முறைகொலோ பகராய்
அந்த நாளொரு குன்றமும் அலகையும் அழியக்
கந்தன் வேற்படை விடும்படி கவின்தரு தமிழே.

தம்மை நின்புகழ்க் கடலிடை வீழ்த்தினர் தமராய்
இம்மை வாழ்வுறத் தமியனேற் கொருசிறி திரங்காய்
செம்மை வெண்மையாய்க் கருமையு மாய்த்திரு முதலாம்
மும்மை மாதரில் திகழ்தரும் முதியமெய்த் தமிழே.

நீடு சீர்த்திரு நெல்லையில் நிலவிய சிறுவன்
பாடும் முத்தமிழ்க் கலையினைப் பழிச்சுமிப் பதிகம்
ஓடு கொள்ளினும் உயர்முடி கொள்ளினும் உலகோர்
நாடும் மெய்ப்புகழ்க் கடலினை நல்கிடும் நன்றே.

தெய்வமே துணை

# "ஆரும் பத்தின் தலைவன்"—ஓர் ஆய்வு

[சி. மெய்கண்டான், எம். ஏ.]

மூவேந்தருள் தலைமை சான்ற சேரர்தம் வரலாற்றைக் கூறும் பதிற்றுப்பத்துள் ஆரும் பத்தின் தலைவன் 'நாடல் சான்ற நயனுடை நெஞ்சின் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்' ஆவான். இவனைப் பாடிய புலவர் காக்கைபாடினியார் நச்செள்ளையார் ஆவார்.

**நோக்கம் :**

இச் சேர மன்னனுக்கு 'ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்' எனப் பெயர் அமையக் காரணம் என்ன? அஃதாவது 'ஆடுகோட் பாட்டுச்சேர லாதன்' எனும் பெயரின் பொருள் என்ன? என்பதனை ஆய்ந்து கண்டறிய முயல்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

**முன்னோர் கருத்து :**

அதற்குமுன், இதுகுறித்துப் பண்டை அறிஞர்களின் கருத்தையும் அறிதல் நலம் பயக்கும். 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' எனும் இப் பெயர் குறித்துப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. அவை :

1. தன்னுடைய ஆடுகளைப் பகைவர்கள் போரில் கவர்ந்து செல்ல, அவருடன் போருடற்றித் தண்ட காரணியக் காடுவரை சென்று அவ் வாடுகளை மீட்டு வந்தனன். எனவே, ஆடுகளைமீட்ட காரணம்பற்றி 'ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்' என வழங்கப் பெற்றான்.

2. பகைவருக்குச் சொந்தமான ஆடுகளை, அவருடன் போருடற்றிப் போரின் முடிவில் வெற்றிகொண்டு கவர்ந்துவந்தான். ஆகையால் இவ்வாறு பெயர் பெற்றான்.

3. யாரானும் பிடித்தற்கரிய 'வருடை' எனும் மலை யாட்டைப் பிடித்துக் கொணர்ந்த அரிதினும் அரிய செயலால் இவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் எனப் பெற்றான். இறுதியாகக் கண்ட இக் கருத்தைச்

'செந்தமிழ்ச் செல்வி' இதழில் (Dec'74) திரு. புலவர் பொ. முனியப்பன் அவர்கள் வெளியிட்டுள்ளார்.

இனி இவற்றைக் காண்போம்.

**பொது இயல்பு :**

மேலே கண்ட இம் மூன்று கருத்துகளிலும் ஒருபொது இயல்பு இழையோடுவதை நாம் காணலாம். அஃது என்ன வென்ருல், இம் மூன்று கருத்துகளை உடையோரும், பதிற்றுப் பத்தின் ஆறும் பதிகத்திலுள்ள,

"தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப்........" (3-4 வரிகள்)

என்ற அடிகள், இம் மன்னனுக்குரிய இப் பெயர் ஏற்பட்ட காரணத்தைச் சுட்டுகின்றன என அசையாத நம்பிக்கை கொண்டிருப்பதேயாம். அதற்கேற்ப, தமிழ்த் தாத்தா உ. வே. சா அவர்களும் "3-4. இவ்வடிகளில் தலைவன் பெயர்க் காரணம் அமைந்துள்ளது"—எனத் தம் பதிற்றுப்பத்துப் பதிப்பில் சுட்டிச்செல்லுவர்.

**உ. வே. சா குறிப்புரை :**

பெரும்புலவர் உ. வே. சா அவர்கள் தம் குறிப்புரையில் 'கோட்பட்ட வருடையை' என்பதற்குப் "பகைவரால் கொள்ளப் பட்ட மலையாடுகளை" என உரை வரைவர். எனவே, பதிப்பின் வேந்து உ. வே. சா. அவர்களின் கருத்துப்படி, தனக்கே உரிய மலையாடுகளைப் பகைவர் கவர்ந்து செல்ல இவன் அவற்றைச் சென்று மீட்டனன் என்பதாம்; ஆகவே, இம் மன்னன் ஆடுகளைப் பகைமுகத்து மீட்ட அரிய செயலினுல் 'ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்' எனப்பட்டான் என்பதாம்.

ஆயின், "தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையை" (பதிகம் 6 : 3) என்ற அடியில் 'தண்டாரணியத்துக் கொள்ளப் பட்ட வருடைகளை'—என்றுதான் பொருள் கொள்ளும்படி, சொற்களின் அமைப்பு உள்ளதே ஒழிய, "தண்டாரணியத்துப் பகைவரால் கொள்ளப்பட்ட (தன்னுடைய) வருடைகளை" என்று பொருள்கொள்ளும்படி இவ்வடி அமைந்திருக்கவில்லை. 'பகைவரால் கொள்ளப்பட்ட' என்று விரித்துப் பொருள் கொள்ளும்படி மூலத்தில் எவ்வகைச் சொற்களும், குறிப்பாக வேனும் அமைக்கப்பெறவில்லை. எனவே, இப் பொருள் பொருந்தாதென்க!

**செயற்கரிய செயலா?**

இனிப் பகைவருக்கு உரிய ஆடுகளைக் கவர்ந்தான்; எனவே, இப் பெயர்பெற்றான் எனக் கூறலாமே எனின், இதுவும் பொருந்தாதென்க. ஏனெனில், ஒருவனை—அதுவும் மன்னனை—அடைகொடுத்து அழைக்குங்காலை, அவனுடைய செயற்கரிய செய்கையினையோ, குறிப்பிடத்தக்க நிகழ்வினையோ அடிப்படையாக வைத்து அழைப்பது இயல்பு. பகை முகத்து ஆடுகளைக் கவர்தல் என்பது 'வீரச் செயலாகுமே ஒழிய, செயற்கரிய செயலாகாது' என்பதனைச் சிறிது சிந்தனைத் திறமுள்ள யாவரும் அறிவர். ஏனெனில், அக் காலத்துப் போரில் ஆநிரைகளைக் கவர்வது கூடவே இனம்பற்றிப் பிற மாவினங்களையும் கவர்வது இயல்பு; ஆனால், இங்கோ ஆடுகளைக் கவர்ந்தான்—ஆநிரைகூட அன்று. ஆகவே இச் சிறப்புப் பெயர் பெற்றான் என்பது பொருந்தாததும், உண்மையாகாத ஒன்றுமாம் என விடுக்க.

**வயாடாபமை—வருடையா?**

இனி, 'ஆட்கோட் பாட்டுச் சேரலாதன்' எனும், கட்டுரையின் ஆசிரியர் வேறு ஒரு காரணத்தைக் கூறுகின்றார். அவர் கூற்று: ''இம் மன்னன் பெற்ற 'ஆடு' என்ற அடைமொழிச் சொல் நாட்டில் வாழும் ஆட்டைக் குறிக்கவில்லை. உயர்ந்த மலையாம் ஓங்கலில் வாழும் 'வருடை' என்னும் மலையாட்டைத் தான் குறித்தது. இதற்கு என்ன சான்று எனின், ஆரும் பதிகத்தின் மூன்றும் வரி 'தண்டகாரண்யத்துக் கோட்பட்ட வருடையை ....'* என்றன்றோ குறிக்கின்றது'' என்பர். இவ்வாசிரியர் கருத்துப்படி, 'ஆடு' என்பது நாட்டாடு அன்று; காட்டிலுள்ள 'வருடை எனும் ஆடு' என்பதாகும். எனவே, இம் மன்னன் எவரும் எளிதிற் கொள்ளற்கரிய மலையாட்டைக் கொண்டு வந்ததால்தான் 'ஆடு' என்ற சொல்லை அடைமொழியாய்ப் பெற்று ஏற்றமுற்றான்'' என்பர்.

நாட்டு ஆடாயினும், காட்டு ஆடாயினும் ஆடு ஆடே! அஃது எந்நாளும் புலியாகாது! எனவே, எதனைக் கைப்பற்றினும் ஒரே மதிப்புத்தான் என்க.

**பழைய உரை:**

மேலும், அக் கட்டுரையாசிரியர், ''பழைய உரையும் வருடை என்பதற்கு மலையாடு என்று தெளிவாகவே உரை

---

* ''தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையை'' என்று இருப்பது தான் சரி!

கூறுகின்றது'' என்பர். ஆயின், ஆழ்ந்துநோக்கின் பழைய உரை இதுகுறித்து ஏதும் பேசவே இல்லை என்பதை அறியலாம். உ. வே. சா. அவர்களின் குறிப்புரைதான் வருடை என்பதற்கு 'மலையாடு' என்கின்றது.

பழையவுரை, இப் பதிகத்தைக் குறித்து, ''இதன்— பதிகத்துத் தண்டாரணியம் (3) என்றது ஆரிய நாட்டிலே உள்ளதோர் நாடு. கபிலை (5) என்றது குராற் பசு''—என்ற அளவே பேசுகின்றது. எனவே, பழைய உரையைத் தம் கருத்துக்குச் சான்ருகக் காட்டுவது பொருந்தாதென்க. அன்றியும், இதுபற்றிப் பழையவுரை எதுவும் பேசாது செல்லுதலே உண்மையும் ஆகும்.

காரணம் :

மேலும், இச் சேரலாதன் வரையாட்டைக் கைப்பற்றிய தற்கு இவர் கூறும் காரணம் வேடிக்கையாக உள்ளது. ''தன் நாட்டில் இல்லாத (அல்லது குறைவாக உள்ள) ஆடுகளை மிகுதியாக்கக் கருதினன். அதற்காக, எளிய நாட்டாடுகளைக் கோணர்தல் தன் தகுதிக்குப் பெருமையாகாது என்று முடிவு செய்து, புதிதாகத் தண்டகாரண்யக் காட்டிற்குச் சென்று பிடித்தற்கரிய வருடை ஆடுகளைப் பிடித்துக் கொண்டுவந்தான்'' என்கின்ருர்.

வருடை வரையில் வாழ்வது. இதனைச் சங்க இலக்கியச் சான்றுகளாலும், கட்டுரை ஆசிரியர் கூற்ருலும் நாம் அறி கின்ரேம். சேரநாடோ வரைகள் மிக்கது; மலைநாடு என்றே அதற்குப் பெயர். அங்கு உள்ள வரைகளில் இல்லாத வருடையா பிற இடங்களில் இருக்கப்போகின்றது? மேலும், அவ்வாறு சேரநாட்டில் வருடைகள் இல்லை (அல்லது குறைவே) என்பதற்கு எவ்விதச் சான்றுமில்லை. எனவே, இஃது ஆசிரியரின் கற்பனையே ஒழிய உண்மையன்று என்க!

வருடை கோட்பாட்டுச் சேரலாதன் :

மேலும், அவ்வாறே வாதத்திற்காக இதனை ஒப்புக் கொண்டாலும், கட்டுரையாசிரியர் கருத்துப்படி, ''வருடை என்னும் மலையாட்டைப் பிடிப்பது அரியதினும் அரிய செயல்''(!) ஆதலால், அம் மன்னன் பெயர் 'வருடை கோட்பாட்டுச் சேரலாதன்' என்றல்லவோ குறிக்கப்பட்டிருக்க வேண்டும்? மாருக 'ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்' என்றன்ரோ இருக் கின்றது? இவ்வாறு 'ஆடு' எனும் அடைகொடுத்து அழைப்ப

தனால் அச் சொல் குறிப்பது ஆட்டினையோ, வருடையினையோ எனத் தடுமாற்றம் ஏற்பட்டுப் பொருள் மயக்கம் ஏற்படவும் வாய்ப்பு உண்டன்றோ? எனவே, அக் காலப் புலமையாளர், இவ்வாறு கருதியிருப்பின் மயக்கம் ஏற்பட வாய்ப்பில்லாதவாறு, தெளிவாக இம் மன்னனை 'வருடை கோட்பாட்டுச் சேரலாதன்' என்றன்றோ கூறியிருப்பர்!

எனவே, இச் சொற்றொடர்க்கு இது பொருளன்று என்க; ஆயின், வேறு பொருள் என்ன என்பதனை இனி ஆய்வோம்.

**உண்மைப் பொருள் :**

'ஆடு' என்றால் வெற்றியாம். இப் பொருளைப், ''பாடுநர் புரவலன் ஆடுநடை யண்ணல்'' (பதிற், 86 : 8) என்பதன் மூலமும் அறியலாம். 'கோட்பாடு' எனின் கொள்கையாம். 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' எனின், ''வெற்றியையே (தன் வாழ்வின்) கொள்கையாகக் கொண்ட சேரலாதன்'' என்பதாம். எனவே, பதிகத்தில் குறிக்கப்படும் ஆட்டிற்கும் (வருடை). இவன் பெயரில் உள்ள ஆட்டிற்கும்(ஆடு)எவ்வகைத் தொடர்பும் இல்லை என்க!

**என்ன தவறு ?**

இனி, ஆட்டினைக் கவர்ந்ததனால்—பொருட் சிறப்பு இல்லாவிடினும்—இப் பெயர் ஏற்பட்டது எனின் என்ன தவறு இருக்க முடியும்? எனின் காண்போம். சேரலாதனின் பெயரிலுள்ள அடைமொழியை நன்கு ஆய்ந்தால் இது விளங்கும்.

'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' என்பது, ஆடு+கோட்பாடு+சேரலாதன்—எனப் பிரியும்.

இங்கு, ஆடு என்பது வெற்றியாம் என்பதனை முன்னரே கண்டோம்.

'கோட்பாடு' என்பது 'கொள்' என்ற வேர்ச் சொல்லினின்று தோன்றியது.

'கொள்' என்பது ''கோள்'' எனவும் 'கோள்படு' எனவும் விரியும்; 'கோள்படு' என்பது 'கோட்படு'(தல்), 'கோட்பட்ட' எனவரும். கோள்படுதலாவது கொள்ளப்படுதலாம். 'கோட்பட்ட' எனின், 'கொள்ளப்பட்ட' என்று பொருளாம்.

ஆயின், சேரலாதனுக்குரிய அடைமொழியில், ஆடு 'கோட்பாட்டு' என்று உள்ளதே ஒழிய 'கோட்பட்ட' என்று இல்லை.

'கோட்பாடு' என்பதுதான் 'கோட்பாட்டு' என விரியும். கோட்பாடு எனின் கொள்கையாம்; 'கோட்பாட்டு' எனின், 'கொள்கையிற்பட்ட' அல்லது 'கொள்கையை மேற்கொண்ட' என்பதாம்.

**'கோட்படு' & 'கோட்பாடு':**

'கொள்' என்பதே இவ்விரண்டற்கும் வேர்ச்சொல்லாக இருப்பினும், 'கொள்ளப்படுதல்' எனப் பொருள்தரும் 'கோட்படு' என்பதே 'கோட்பட்ட' என வரும்; 'கொள்கை' எனப் பொருள்தரும் 'கோட்பாடு' என்பதே 'கோட்பாட்டு' என விரியும். (இங்குக் கோட்பட்ட எனின் 'கொள்ளப்பட்ட' என்பது பொருள்; 'கோட்பாட்டு' எனின் 'கொள்கையை மேற்கொண்ட' என்பது பொருள்).

இங்கு, 'ஆடு' என்பது ஆடுகளைக் குறித்து, அதனைக் 'கொண்டதனால்' இம் மன்னனுக்குப் பெயர் ஏற்பட்டது எனின், இவன் பெயர் 'ஆடுகோட்பட்ட சேரலாதன்' என்றோ 'ஆடுகொண்டசேரலாதன்' என்றோதான் அமைந்திருக்க வேண்டும்.

பதிகத்துள் வரும் 'கோட்பட்ட வருடை' என்பதுள், 'கோட்பட்ட' என்பது கொள்ளுதல் என்ற பொருளில் வருதலைக் காண்க.

ஆயின், இதற்கு மாறாக, 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' என அமைந்திருப்பதனால், "வெற்றியையே (ஆடு), (தன் வாழ்வின்) கொள்கையாகக் கொண்ட (கோட்பாட்டு) சேரலாதன்" என்று பொருள் கொள்ளுதலே பொருளுடையதும் பொருந்துவதும் ஆகும் என்க!

**வெற்றிச் சிறப்பு:**

எல்லா மன்னரும் வெற்றியையே விரும்பினும், இவனுக்கு மட்டும் இப் பெயர் சிறப்பாகக் கூறக் காரணம், மற்ற யாவரினும் இவன் வெற்றிமேல் கொண்ட (கழிபெருங்) காதலால் என்க.

**போர் வெற்றி:**

பதிற்றுப்பத்தின் பாடல்களைக் கூர்ந்து நோக்கின் இது நன்கு புலனாகும். அகம், புறம் ஆகிய வாழ்க்கையின் இரு கூறுகளிலும் இவன் வெற்றியையே தன் உயிர்ப் பண்பாகக்

கொண்டு ஒழுகி வந்தான். இவன், போரில் என்றும் வெற்றியே கண்டவன் என்பதனை,

''நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை''
(பதிற்., 52 : 10)

''வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப'' (53 : 2)

''உள்ளியது முடித்தி'' (54 : 2)

''நீடுவரை யடுக்கத்த நாடுகைக் கொண்டு'' (55 : 18)

என்ற அடிகளின் வாயிலாக நன்கு அறியலாம். இனி,

''வீறு இரு கொற்றத்துச், செல்வர் செல்வ'' (59 : 9-10)

என்பதனால், இச் சேரலாதன் மூவேந்தரில் தலைமைவாய்ந்த வெற்றியை உடையவன் என்பது புலனாதல் காண்க. அது மட்டுமா? குமரியோடு வடவிமயத்து மன்னர் யாவரும் அடங்கி வாழ (51 : 12-16) ஆட்சிபுரிந்த வெற்றி மேம்பாட்டையுடையவன் என்க.

**கொடை வெற்றி :**

அன்றியும், கொடையிலும் பெரும் வெற்றிப்பாட்டை உடையவன். கொடுத்துக் கொடுத்து, இவன் நாட்டில் இரவலரே இல்லையானார்; ஆதலால், எங்கு இரவலர் உள்ளனரோ என அவரைத் தேடிக் கண்டு தேரிலேற்றிக் கொணர்ந்து வேண்டியன நல்கிய கொடைப்புகழ் படைத்தவன் என்பதனை,

''வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நசைசால் வாய்மொழி யிசைசா லோன்றல்'' (55 : 10-12)

என்பதனால் அறியலாம். இத்தகைய வள்ளற் குணம்படைத்த மன்னன் யாண்டுளன்? எனவே, இங்கும் (கொடையிலும்) அவன் வெற்றிப் பாட்டினைக் காணலாம்.

**அகவாழ்வில் வெற்றி :**

அகத்துறையிலும், அவன் வெற்றியினை முழுமையாக அடைந்தவன் என்பதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் இவன்மேற் பாடிய பாடல்களை நுணுகி ஆய்வார்

நன்கறிவர். விரிப்பின் பெருகும்—ஆதலின் இத்தோடு விடுத்தாம். எனவே, வாழ்வின் எத்துறையிலும் வெற்றியையே தன் கொள்கையாக—உயிர்ப் பண்பாகக்— கொண்டு ஒழுகிவந்தமையின் இவன் 'ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்' எனப்பட்டான் என்பதே உண்மையாகும்.

முடிவு :

இதுகாறும் 'பகைவர்க்குரிய ஆடுகளைக் கவர்ந்ததனால் இப்பெயர் பெற்றான்' என்றும்,

பகைவர் கவர்ந்த (தன்னுடைய) ஆடுகளை மீண்டும் மீட்ட பெருமையால் இப்பெயர் பெற்றான் என்றும்,

வரையாடுகளைத் தண்டாரணியத்திலிருந்து, கொண்டு வந்ததனால் இப்பெயர் பெற்றான் என்றும், பலவாருகக் கூறும் கருத்துகள் பொருந்தாமையை அறிந்தோம். மாறாக, ''என்றும் வெற்றியையே (தன் வாழ்வின் குறிக்கோளாகக்) கொள்கையாகக் கொண்டு ஒழுகி வந்தவன் ஆதலின் ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' என்று பெயர் பெற்றான் என்று அறிந்தோம்.

பதிகம் கூறுவது :

இனி, ஆறும்பத்தின் பதிகமானது,

> ''தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
> தொண்டியுட் டந்து கொடுப்பித்து...'' (6 : 3—4)

எனக் கூறுவதன் பொருள் யாது என்பதனைக் காண்போம். இதன் பொருள்—''தண்டாரணியத்துத் தன்னால் கொள்ளப் பட்ட வருடைகளைத் தொண்டி நகருக்குக் கொண்டுவந்து, பாணர், பொருநர் விறலியர் முதலானோர்க்கு வழங்கினான்'' என்பதாம். இங்கு, இவனுடைய கொடைச் சிறப்பைச் சுட்டுவதுதான் நோக்கமேயொழிய வீரத்தையன்று. இது, இதன் பின்னர் வரும், ''பார்ப்பார்க்குக், கபிலையொடு குடநாட் டோரூரீத்து''—என்ற அடியால் நன்கு விளங்கும்.

இவன், ஆடுகளைக் கவர்ந்து இரவலர்க்கு வழங்கினான் என்பதில் எவ்விதக் குறைபாடுமில்லை; ஆயின், ஆடுகளைக் கொண்ட இச்செயலால்தான் இவனுக்கு இப்பெயர் ஏற்பட்டது என்பது சிறப்பற்றதும், பொருந்தாததும் ஆகும்.

**வேறொரு கருத்து :**

இனிப் பதிற்றுப்பத்தின் பாடல் ஒன்று,

''விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்து
...... ...... ...... ......
...... ...... ...... ......
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே'' (56)

என்பதனால், இவன் விழவுக்களத்தில் ஆடாது, போர்க்களத்தில் வென்று ஆடும் இயல்புடையவன் என்பதனை அறிகின்றோம். மற்றுமொரு பாடல்,

''துணங்கை யாடிய வலம்படு கோமான்'' (57 : 4)

என மேலும் இதனை வலியுறுத்திப் பேசுகின்றது.

ஆகவே, ''போரில் வெற்றி பெற்ற பின்னர்த் துணங்கை யாடுதலை (ஆடு)த் தன் கொள்கையாக மேற்கொண்ட சேரலாதன்'' என இவன் ஆட்டத்தினை விதந்து பெயரிட்டனர் எனக் கூறினும் அமையும்.

பிற மன்னர்களும் வெற்றிக்களிப்பில் போர்முகத்து ஆடினும், இவன்றன் போர்முகத்து ஆடுஞ் சிறப்பினை உளத்திற்கொண்டு 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்' எனப் பெயரிட்டனர் என்க. இது பொருந்துமேற் கொள்க. (இங்கு ஆடு என்பது ஆடுதல் என்ற பொருளில் வந்தது).

---

நூல் நிலையம்

*பாவிடத்தில் கவர்ச்சிகொளும் பாழான மனிதரெலாம்
நூலிடத்தில் கவர்ச்சிகொண்டால் நோயெல்லாம் தீராவோ?
காலிருத்திக் கற்றின்ற கலைக்கோவில் நூலகந்தான்
ஆலமுதாம் ஊஞ்சலடா! ஆருயிர்க்கோர் துறக்கமடா!*

—அடியன் மணிவாசகன்.

# தேவார ஆசிரியர் மூவர் பாடியருளிய வேண்டுகோள் பதிகங்கள்

இத் தலைப்பில் 5 நூல்கள் கழக வழி வெளியிடப்பெற்றிருக்கின்றன. முதல் நான்கு நூல்கள் ஒவ்வொன்றிலும் நான்கு முழுப்பதிகங்கள் உள்ளன. 5ஆவது நூலின்கண் புல்வகை வேண்டுதலைக் கொண்ட பாடல்கள் 61 இருக்கின்றன. ஒவ்வொரு பதிகத்தின் தலைப்பிலும் அதனை ஓதுவதால் கிடைக்கப்பெறும் பயனைச் சுருக்கமாகவும், அடிக்குறிப்பாகக் கடின சொற்களுக்குப் பொருளும் தரப்பட்டிருப்பதோடு பதிகத்தின் இறுதியில் கழகப் புலவர் சித்தாந்த பண்டிதர் ப இராமநாத பிள்ளை அவர்கள் பதிகத்தை ஓதுவதால் கிடைக்கப்பெறும் நன்மைகளை விளக்கியும் எழுதியுள்ளனர். 5ஆவது புத்தகத்திலுள்ள 61 பாட்டுகளும் 25 தலைப்புகளில் அமைக்கப்பெற்றிருக்கின்றன.

இவற்றை முறையாக ஓதிப் பலர் பல நன்மைகளைப் பெற்றிருக்கின்றனர். அவற்றில் ஒன்றைமட்டும் இங்கே கூறுகின்றேன்.

என் அருமைத் தம்பியார், ஓய்வுபெற்ற, உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் திரு. வே. நடராச பிள்ளை (பி ஏ., எல். டி.) யின் திருமகளார் திருவளர் செல்வி கா. சரசுவதியம்மை திருச்சி தில்லைநகரில் தம் இன்னுயிர்க் கணவனார் ஓய்வுபெற்ற வருமான வரித்துறை ஆணையர் திருவாளர் மா. காசிவிசுவநாத பிள்ளை, (எம். ஏ) அவர்களோடு வாழ்கின்றாள். அவர்கள் தாத்தாவுக்குச் சொந்தமான வீடொன்று திருச்சி ஆண்டார் தெருவிலுள்ளது. அதில் குடியிருந்தவர் நீண்டகாலமாக வாடகையினைக் கொடுக்காமலும் வீட்டைப் பாழ்படுத்தியும் தொல்லை கொடுத்து வந்தனர்.

தெய்வபக்தி நிறைந்த திருமகளாரும் அவள் தம் கணவனாரும் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தவர்களாய் இருக்கும்போது வேண்டுகோள் பதிகங்களின் தொகுப்பு நூலை எடுத்துப் பார்த்தனர். அத் தொகுப்பிலுள்ள 4ஆவது புத்தகத்தின் 4ஆவது பதிகம் திருநெடுங்களப் பெருமானைப்பற்றித் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்றதாகும். 'மறையுடையாய்' என்று தொடங்கும் பதிகத்தின் முதல் பத்துப் பாட்டுகளின் ஈற்றடியில் 'இடர் களையாய் நெடுங்கள மேயவனே' என்றும் 11ஆவது பாட்டில்

> "............ஞானசம்பந்தன் சொன்ன
> பாடல்பத்தும் பாடவல்லவர் பாவம் பறையுமே"

என்றும் காணப்படுகின்றன.

கழகப் புலவர் அவர்கள் திருநெடுங்களப் பதிகத்தின் இறுதியில் எழுதிய குறிப்பு வருமாறு:

"மக்கட்குப் பல்வகையில் இடர்நேரிடும். பகைவர்கள் வல்லடி வழக்குகளால் பெருந் துன்பஞ் செய்வர். அவ் வழக்குகளை நாம் தெய்வத் துணையால்தான் வெல்ல முடியும். நம்முடைய உரிமைகளை அவர்கள் வலுக்கட்டாயமாகப் பறித்துக் கொள்ளுவர். அவ் வுரிமைகளை மீட்டும் பெற ஏற்படும் வழக்குகளை வெல்லுதற்கும் தெய்வத் துணையே வேண்டும். அதனை நமக்கு இனிதாக எளிதாக அருள்வது இத்திருப்பதிகமே"

இந்தப் பதிகத்தைக் கணவரும் மனைவியும் ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் ஒருநெறிய மனம் வைத்து முறையாக இரு திங்கள் ஓதிவந்தனர். மேலே குறிப்பிட்ட வீட்டில் குடியிருந்தவர் தாமாகவே வீட்டைக் காலி செய்து விட்டனராம். இது கண்கண்ட திருவருள் நிகழ்ச்சி.

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" —அப்பர்

## மற்றோர் அற்புதத் திருவருள் நிகழ்ச்சி

என் மதிப்பிற்கும் அன்பிற்குமுரிய நண்பரும் பொன்னேரி அரசு கலைக் கல்லூரி முதல்வருமான உயர்திரு எம். கே. தங்கவேலனார் எம். ஏ., எம். லிட். அவர்களுடைய மக்களுள் ஒன்பது அகவையுள்ள பெண் குழந்தைக்கு மிகவும் பிடித்தமான பாட்டு

"சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்
செகுத்தவ ருயிர்க்கும் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம் யாம்."

என்று அருணகிரிநாதர் அருளிய திருப்புகழாகும்.

வீட்டிலே ஏதாவது ஒரு பொருள் காணப் பெறாமல் மறைந்து கிடக்குமாயின் அச் சிறுமி மேற்படி பாட்டைப் பாடிக் கொண்டு மறைந்து கிடக்கும் பொருளை உடனே எடுத்துவந்து கொடுப்பாளாம். இந்தப்படி பல அருள் நிகழ்ச்சிகளைச் சொல்லக் கேட்டு இன்புற்றேன். தேர்வு எழுதப் போகும் போது தான் முதலாவதாகத் தேர்ச்சி பெறுதல் வேண்டுமென்று மேற்படி பாட்டைப் பாடிச் செல்வாளாம். கருதியவாறு தேர்வில் முதலிடம் பெற்றுவருதலும் கண்கூடு.

—வ. சு.

———

# திருமண வாழ்த்து

செல்வன்: மா. இரகுபதி — செல்வி: சுகுணா

27—1—1975

எல்லா உயிர்க்கும் இன்பமே அருளும்
இறைவன் அருளால் இன்பத் திருமணம்
செய்துளீர்! இந்நாள் செய்யுமிவ் வாழ்வு
சிறப்புற் றோங்குக! திருக்குறள் வழியே
இல்லறம் நடத்துக! இன்தமிழ் போற்றுக!
இனியவன் வல்லவன் இறையருள் மிகுந்து
பொன்னும் புகழும் பொருந்துநல் ஊழும்
மன்னிய கல்வி மாண்புடன் வலிமை
வெற்றி நன்மக்கள் விளைவுடன் செந்நெல்
உற்றநல் லமுது உறுநந் நுகர்ச்சி
வாழ்நாள் அறிவு மல்கிய இளமை
மாண்பார் பெருமை மகிழார் துணிவெனும்
பேறுபதி னாறும் பெற்றுவாழ்ந் திடுக!
அன்பும் அறனும் அமைந்து வாழ்ந்து
பண்பும் பயனும் பாங்குற
வாழிய! வாழிய!! வாழிய நிறைந்தே!!!

*C-114 தில்லைநகர்,*
*திருச்சி-620018.*

அன்புள்ள,
சா. பெரியசாமி.

## மணமக்கள் நீடினிது வாழ்க!

என் பெருமதிப்புக்கும் பேரன்பிற்குமுரிய திருச்சி வரகனேரி திரு. பொ. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்களின் திருமகனார் செல்வன் இரகுபதிக்கும் செல்வி சுகுணாவுக்கும் திருச்சிக்கருகிலுள்ள குணசீலம் பெருமாள் கோயிலில் 27—1—1975 இல் நடைபெற்ற திருமணத்தின் போது செட்டிநாட்டு இராசா சர் முத்தையா செட்டியார் அவர்களும் நவாப்பகதூர் நாராயணசாமி பிள்ளை அவர்களும் நேரிற் சென்று மணமக்களை வாழ்த்தினர் என்ற செய்தி யறிந்து கழிபேருவகை அடைந்தேன். மணமக்கள் எல்லாவகைப் பேறுகளும் பெற்று நீடினிது வாழ்கவெனத் தாயுமானவர் இணையடிகளை வாழ்த்தி வணங்கி வேண்டுகிறேன்.

வ. சு.

# செய்திகளும் குறிப்புகளும்

## நாகபுரி இந்தி நாடகம்!

"உலக இந்திமொழி மாநாடு" என்ற பெயரில் சனவரி 11, 12ஆம் நாட்களில் நாகபுரியில் ஒரு நாடகமே நடந்திருக்கிறது. வடநாட்டு இந்தி வெறியர்களுக்குச் சிறிது காலமாக இந்தி மொழியை உலகத்தின் கண்களில் உயர்த்திக் காட்டிட வேண்டும் என்ற எண்ணம் தோன்றி யிருக்கிறது. அதன் விளைவுதான் நாகபுரி மாநாடு. நாகபுரியில் கூடியவர் உண்மையிலேயே அம்மொழிப் பற்றுடையவர்களா என்றால், அதுவும் இல்லை. அவர்கள் நோக்கமெல்லாம் மொழி ஆதிக்கத்தை அடிப்படையாக வைத்துத் தம்முடைய வாழ்வை வளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதேயன்றி வேறில்லை. எனவே, அந்த மாநாடு குழப்பத்தில் முடிந்திருக்கிறது. இந்திப் பேராசிரியர்களும், பல்கலைக் கழக மாணவர்களும், மற்றுமுள்ள இளைஞர்களும் இந்த உலக இந்தி மொழி மாநாட்டில் தம் உள்ளக் குமுறல்களை வெளியிட்டுள்ளனர். அவர்களுக்கு மாநாட்டில் மதிப்பளிக்கப்படவில்லை. பேச இடமளிக் கப்படவில்லை. ஆகவே, அவர்கள் மாநாட்டைவிட்டு வெளியேறி அதே நாளில் போட்டி மாநாடு நடத்தியுள்ளனர்.

இந்தி மொழியே இவ்விந்தியத் துணைக் கண்டத்தைக் கட்டியாள வேண்டும் என்று கருதிய இந்தி வெறியர்களின் குட்டு எப்படி யெல்லாம் வெளிப்படுகிறது என்பதற்கு நாகபுரி மாநாடு நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

இந்த உலக இந்தி மொழி மாநாட்டின் போக்குப் பிடிக்காத நல்ல வர்கள் அதே மாநாட்டில் ஓர் அறிக்கையினை வெளியிட்டுள்ளனர். அதன் சுருக்கம் வருமாறு:

"உலக இந்தி மாநாட்டை நடத்துவோர் பெரும்பாலும் இந்தி மொழியின்பால் பற்றுக்கொண்டோ ரல்லர். அவர்கள் பெரும் முதலாளிகளின் எடுபிடிகள்; இந்திமொழி நூல்களை வெளியிட்டுப் பேரூதியம் தேடும் பதிப்பக முதலாளிகளின் ஏவலாட்கள். ஏழை எளியவரின் துயர்பற்றிக் கவலைப்படாத நலவாழ்வினர். ஆட்சிப் பொறுப்பிலிருக்கும் இந்திரா காங்கிரசின் துணையோடு பொருள் தேடுதற்கு மக்களின் கவனத்தைத் திசை திருப்புதற்காக மாநாடு என்ற பெயரில் இந்த நாடக மாடுகின்றனர்."

இந்த அறிக்கையைப் படித்தவர் தில்லிப் பல்கலைக் கழகப் பேரா சிரியர் பங்கஜ்சிங் என்பவர்.

அதே மாநாட்டில்:

"தந்நலமுடைய இவர்கள்தாம் இந்தியின் காவலர்களா? மக்கள் வறுமையில் வாடும்போது இந்தியின் பெயரால் கும்மாளமா?" என்று பல்கலைக் கழக மாணவர்கள் குரல் எழுப்பியுள்ளனர்.

அதுமட்டு மன்று; அந்த மாநாட்டின் நடவடிக்கைகளைப் பார்த் தோர் அஃது இந்திமொழி மாநாடா; சமக்கிருதமொழி மாநாடா? என்று ஐயுறுமளவிற்குச் சமக்கிருதப் பாடல்கள் விரவி இருந்தனவாம். இதைக் கண்டு அனைத்திந்திய காங்கிரஸ் குழுவின் செயலாளர் நரசிம்ம

ராவ் என்பவர் "இஃதென்ன இந்தி மாநாடா?" சமக்கிருத மாநாடா?" என்று கேட்டாராம்.

## தில்லியில் நாகபுரியின் எதிரொலி

நாகபுரி மாநாட்டை யடுத்து 25—1—75இல் தில்லியில் ஓர் இந்தி மாநாடு நடைபெற்றது. அம் மாநாட்டிலும் இந்தி வெறியர் ஆதிக்கம் காணப்பட்டது. தில்லிப் பல்கலைக் கழக மாணவர் தலைவர் திரிநேத்ர ஜோஷி என்பவரை மாநாட்டினர் பேச அனுமதிக்கவில்லை. அதனைத் தொடர்ந்து மாணவர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். அப்போது அம் மாணவர் தலைவர்,

> "இந்தி மாநாடென்பது இந்தியா
> வின் பிற மொழிகளுக் கெதிரான
> திட்டமிட்ட தொரு சூழ்ச்சி"

என்று திட்டவட்டமாகக் கூறினாராம்!

இந்தி பொதுமொழியாக வேண்டும் எனப் புலம்புவோர் இப்போ தேனும் உண்மையை உணர்வார்களாக. அத்துடன் இந்தி ஆதிக்கம் என்பது மறைமுகமாக சமக்கிருதத்திற்கு ஆக்கந்தேடும் சூழ்ச்சி என் பதையும் நாம் உணரவேண்டும். சமக்கிருத ஆக்கம் தமிழுக்கும், தமிழர் கலை, நாகரிகம், பண்பாடுகட்கும் ஊறு விளைப்பனவாகும் என் பதையும் உணர்ந்தே பல ஆண்டுகளாக நாம் இந்தியை எதிர்த்து வருகிறோம் என்பதையும் ஈண்டு நினைவுபடுத்துகிறோம்.

## இந்தி மொழியில் ஏற்ற நூல்களில்லை

"இந்தி மொழியில் பக்தி பற்றிய நூல்களே அதிகம். அறிவியல், தொழில் நுட்பம் பற்றிய நூல்களோ, அத்தகைய நூல்களை எழுதக் கூடிய எழுத்தாளர்களோ மிகக் குறைவு. இந்திமொழி வளர்ச்சி மந்தமாக இருப்பதற்கு இந்தி ஆதரவாளர்களே காரணராவர். எக்காரணம் கொண்டும் இந்தியை ஏற்குமாறு இந்தி பேசாத மக்களைக் கட்டாயப்படுத்துவதில் எனது அரசுக்கு நம்பிக்கை இல்லை" என்று நாகபுரி இந்தி மாநாட்டில் இந்திய நாட்டுத் தலைமை அமைச்சர் இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

## உருசிய மொழியில் திருக்குறள்

பெரும்பான்மையான உலக மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ள திருக்குறள், இப்போது உருசிய மொழியிலும் குறள் வெண்பா யாப்பின்படியே மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது. அயல் மொழிகளில் இங்ஙனம் முறைப்படி மொழியாக்கம் செய்யப்பட் டிருப்பது இதுவே முதல் முறையாகும். சோவியத்யூனியன் இதனைப் பரிசுப் பதிப்பாக ஐம்பதினாயிரம் படிகட்குமேல் அச்சிட்டுள்ளது. முன்னரே இந்தத் திருக்குறள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது எனினும் அஃது உரைநடை நூலேயாகும். அதனை இப்போது குறள் யாப்பில் மொழியாக்கம் செய்திருப்பவர் அலிப் இப்ராகிம்மோவ் என்னும் புகழ்பெற்ற ஒரு மொழியியல் அறிஞராவர்.

## சென்னைப் பல்கலைக்கழகக் கருத்தரங்கு

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் நான்காவது பொது நிலைப் பத்துநாள் கருத்தரங்கு 21-1-75 முதல் 29-1-75 வரை நடைபெற்றது, அத்துடன் புது நூல்கள் வெளியீடு—தொல்பொருள்—புத்தகக் காட்சி ஆகியன, பல்கலைக்கழகத் துணைவேந்தர் தாமரைத்திரு நெ. து சுந்தரவடிவேலு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. புது நூல்களின் முதற்படிகளை முறையே டாக்டர் ஜான் ஈவ்ஸ், டாக்டர் ஹெர்ரிங், கழக ஆட்சியாளர் தாமரைத்திரு வ. சுப்பையா, வே. தில்லைநாயகம், சு ஸ்ரீபால், மு அருணாசலம், தொண்டல் சு. மகாதேவன், ஆர். திருவேங்கடம் ஆகியோர் பெற்றுக்கொண்டனர்.

தமிழ்நாட்டுச் சட்டப் பேரவைத் தலைவர், புலவர் கா. கோவிந்தன் அவர்கள் தலைமையில் "உரையாசிரியர்கள்" (11 முதல் 18 ஆம் நூற்றாண்டு வரை) என்னும் பொதுப் பொருள் பற்றிய கருத்தரங்கு தொடங்கப் பெற்றது. முறையே பேராசிரியர் மா. நன்னன், ந. ரா. முருகவேள், டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், பெரும்புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, அ. கி. பரந்தாமனார், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், திரு. ம. பொ. சிவஞானம், தி. கி. நாராயணசாமி நாயுடு, க. த. திருநாவுக்கரசு ஆகியோர் தலைமையில் புலவர் ஆ சிவலிங்கனார். டாக்டர் தமிழண்ணல், டாக்டர் ஔவை து. நடராசன், வி. அ. அரங்கசாமி, மு வை. அரவிந்தன், டாக்டர் இரா. சாரங்கபாணி, இ. சுந்தரமூர்த்தி, க. வெள்ளைவாரணனார், தெ. ஞானசுந்தரம், திருமதி ஆர். இராசலட்சுமி ஆகிய தமிழறிஞர்கள் தம்முடைய சொற்பொழிவுகளைக் கட்டுரைகளாக்கி வழங்கினர். பேராசிரியர் பதின்மர் வரவேற்புரை நிகழ்த்தினர். டாக்டர் ந. சஞ்சீவி நன்றியுரை வழங்கினார்.

கருத்தரங்கினையொட்டி, சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் நூற் காட்சியும் கண்காட்சியும் அமைக்கப் பெற்றிருந்தன. தமிழறிஞர்களை இலக்கியச் சொற்பொழிவுகள் ஆற்றச் செய்து. அவற்றைக் கட்டுரையாக முன்னதாக எழுதிவாங்கி நூல் வடிவில் வெளிக் கொணரும் புதிய முறையைத் தமிழகத்தில் முதன்முதல் செயல் படுத்தியதும் சை. சி. நூற்பதிப்புக் கழகமே என்பது ஈண்டு நினைவு கூர்தற்குரியதாகும்.

## நில நடுக்கமும் உள நடுக்கமும்

சீனாவிலும், பீகிங்கிலும், மைய கொரியாவிலும், இமாசலத்திலும் சில நாட்களாகக் கடுமையான நில நடுக்கம் ஏற்பட்டதாக உருசிய, சப்பானிய புவியியல் ஆராய்ச்சி நிலையங்கள் அறிவித்தன. அண்மைக் காலமாக இதுபோன்ற செய்திகள் இதழ்களில் வரக் காண்கிறோம். இஃதில மக்கட்கு உள நடுக்கத்தை விளைவித்து வருவதை உற்று நோக்கினால் உலகம் நிலையாமை, யாக்கை நிலையாமை என்பனவற்றை உணர்த்துகின்றது. அத்துடன் மக்களின் அறிவாற்றல்கட்கு அப்பாற் பட்டதோர் ஆற்றல் இப் புவியினை ஆட்டிப் படைத்து அழித்து வருகின்றது என்ற உண்மையினை நமக்கு உணர்த்துகின்றது.

## நக்கீரர் கழகம்—தமிழ் விழா

சென்னை நக்கீரர் கழகத்தின் சார்பிலும், அதனால் இயக்கப் பெறும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பிலும் 15—1—75 இல், மண்ணடி ஏ. ஆர். சி. உயர்நிலைப்பள்ளியில் தமிழ்த் திருநாள்—திருவள்ளுவர் திருநாள்—சிலப்பதிகாரச் சொற்பொழிவுகள் தொடக்க விழா ஆகியன திரு. சங்கரலிங்கம், பி.எசி., அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றன. 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் நூல் இயற்றி சாகித்ய அகாதமி பரிசு பெற்ற பேராசிரியர் திரு. க. த. திருநாவுக்கரசு அவர்கட்கும், 'திருவாசகம்' பற்றி ஆராய்ச்சி நூல் இயற்றி டாக்டர் பட்டம் பெற்ற திருவாட்டி இந்திரா சோமசுந்தரம் அவர்கட்கும் விழாத் தலைவர் புத்தாடை அணிவித்துச் சிறப்பித்தார்கள். டாக்டர் ஔவை து. நடராசன் அவர்கள் பாராட்டுரை வழங்கினார். சிலப்பதிகார ஆராய்ச்சிச் சிறப்புச் சொற்பொழிவினைக் கவிஞர் எஸ். கருணானந்தம் அவர்கள் தொடங்கி வைத்து நக்கீரர் கழகப் புலவர்கட்குத் 'திருக்குறள் நாட் குறிப்பும், நாட் காட்டியும்' வழங்கினர். சிலம்பொலி சு. செல்லப்பன். எம்.ஏ., பி.டி. அவர்கள் 'சிலப்பதிகாரம்' பற்றிய முதல் சொற்பொழிவினை நிகழ்த்தினார். 10-2-75 இல் அவர்களால் இறுதியாக 8 ஆவது சொற்பொழிவு நிகழ்த்தப் பட்டது. புலவர் நா. இராசகோபாலன், பி ஏ , அவர்கள் அனைவரையும் வரவேற்றார். திரு. சிறுவை மோகனசுந்தரம் அவர்கள் நன்றிநவில விழா இனிது முடிந்தது.

## சைவ உணவே சாலச் சிறந்தது—அமைச்சர் கருத்துரை

இந்திய சைவ உணவு கொள்வோர் குழுவின் சார்பில் 27—1—75 இல் சென்னையில் ஒரு விழா நடைபெற்றது. இக் குழுவின் தலைவரான டாக்டர் டி. எம். பி. மகாதேவன் வரவேற்புரை நிகழ்த்தினார். அறிவியல் ஒழுக்க அடிப்படையில், சைவ உணவு கொள்ளுதலால் விளையும் நன்மைகள் பற்றிப் பல கல்லூரி மாணவர்கட்கிடையே நடைபெற்ற கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்றோர்க்கு மாண்புமிகு கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் பரிசுகளை வழங்கிப் பாராட்டினார். அப்போது,

"பொதுவாக மக்கள், அதிலும் சிறப்பாக இளைஞர்கள் சைவ உணவினையே உட்கொள்ளும் பழக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் அசைவ உணவை விடச் சைவ உணவுதான் அதிக சத்துள்ளதும், நயமானதுமாகும்" என்று குறிப்பிட்டார்.

### பரல் 5 இல் தலைப்புக் கட்டுரையில் திருத்தம்

'வேர்ச்சொல் அகர முதலி' என்பதைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி' எனவும், தட்டச்சுப் பொறியினராக வேலை பார்த்த பெண்மணி தாமாகவே வேறு வேலைக்குப் போய்விட்டனர் எனவும், அலுவலகத்துக்குரிய தட்டுமுட்டுப் பொருள்கள் (Furniture) பாட நூல் நிறுவனத்திலேயே வைக்கப் பெற்றிருக்கின்றன எனவும் திருத்திப் படிக்குமாறு வேண்டுகிறோம்.

வ. சு.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்காக
சென்னை-600001, 2-140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

## கழகப் புதிய வெளியீடுகள்

தமிழ் இலக்கியத்தின் சுவையினையும் பல்வேறு அறிவியல் உண்மைகளையும் இளைஞர்கள் எளிதில் பெற்று மகிழும் வண்ணம் இதிகாசங்கள், புராணங்கள், நீதிகள், அறிவியல் நூல்கள் ஆகியன தக்க புலவர்களையும் தமிழறிஞர்களையும் கொண்டு இனிய எளிய நடையில் எழுதுவிக்கப் பெற்று வெளிவந்துள்ளன. அவை வருமாறு:

**ஆசிரியர்: புலவர் இரா. இளங்குமரன்:**

| நூல் | | விலை |
|---|---|---|
| தமிழ் நாட்டுப் பழங்கதைகள் | — | 2 25 |
| தனிப்பாடல் இன்சுவைத் திரட்டு | — | 2 00 |
| பாரதியார் பாடல் திரட்டு | — | 1 80 |
| கல்வியும் செல்வமும் | — | 2 25 |
| எங்கும் பொழியும் இன்பத் தமிழ் | — | 1 75 |
| கிறித்து மொழிக் கதைகள் அல்லது கிறித்து மொழி உவமைகள் | — | 2 50 |
| நல்வாழ்வுக்கு வழிகாட்டும் கட்டுரைகள் | — | 2 00 |
| தாய்மார் வளர்த்த தமிழ் | — | 1 80 |

**ஆசிரியர்: சு. அ. இராமசாமிப் புலவர்**

| நூல் | | விலை |
|---|---|---|
| இளைஞர்க்கான அரிச்சந்திரன் கதை | — | 2 00 |
| இளைஞர்க்கான பாரதக் கதை | — | 4 50 |
| இளைஞர்க்கான நளன் கதை | — | 1 75 |
| இளைஞர்க்கான குசேலர் கதை | — | 1 75 |

**ஆசிரியர்: என். கே. வேலன், பி.ஏ.**

| நூல் | | விலை |
|---|---|---|
| இளைஞர்க்கான பெரிய புராணக் கதைகள் | — | 2 50 |
| தாளின் கதை | — | 5 00 |

**ஆசிரியர்: புலவர் சொ. முருகேச முதலியார்**

| நூல் | | விலை |
|---|---|---|
| இளைஞர்க்கான கம்பராமாயணக் கதை | — | 4 50 |

**பேராசிரியர் மா. பா. குருசாமி எம்.ஏ., டி.ஜி.டி.,**

| நூல் | | விலை |
|---|---|---|
| பணத்தின் கதை | — | 1 75 |
| பாங்கின் கதை | — | 1 75 |

பதிவு எண் : M. 4899





அப்பர் அச்சகம், சென்னை-600 001.